# பொருளடக்கம்

மலர் 19] டிசம்பர் 1966 [இதழ் 6
ஹிஜ்ரீ 1386 ஷஃபான்-ரமலான்



மற்றும் பல சுவையான கட்டுரைகள், கேள்வி—பதில்கள்

முஸ்லிம் முரசில் வெளியாகின்ற
கதைகளில் வரும் சம்பவம், பெயர்கள் யாவும் கற்பனையே!

போன்:
25174

# முயல் ஜோடி



கண் கவர் கைலிகள்

மென்மை மிகு கைக்குட்டைகள்

வெண்மைமிகு வேட்டிகள்

வனப்பு மிகு சேலைகள்

புதுமையான ஸ்லாக்குகள்

வண்ணச் சோளிகள்



உற்பத்தியாளர்கள் விற்பனையாளர்கள்

**A.V.மல்லைய்ய செட்டியார் & சன்**




5, ராமசாமி தெரு,
மண்ணடி,
சென்னை - 1
போன்: 25174

275, இராமநாத
புரம் ரோடு,
கீழவாசல்,
மதுரை -9.
போன்; 5259



# மத சுதந்திரத்தில் தலையீடு!

பாரத நாட்டில் வாழும் சிறுபான்மையினர், குறிப்பாக முஸ்லிம்கள், பூரணமான மத சுதந்திரமும் பாதுகாப்பும் பெற்று வாழ்வதாக உலக முழுவதும் பிரச்சாரம் செய்கிறது நம் இந்திய அரசாங்கம்.

அக்கூற்றிலே எந்த அளவுக்கு உண்மை இருக்கிறது என்பது சர்ச்சைக் குரியது. முஸ்லிமகளின் மத சுதந்திரத்தில் தலையிடும் முயற்சிகள் அவ்வப்போது நடந்து கொண்டுதான் இருக்கின்றன. முஸ்லிம்களின் எதிர்ப்பையும் லட்சியம் செய்யாது விசேஷ விவாகச் சட்டம் நிறை வேற்றப்பட்டது போன்ற காரியங்கள் நடைபெற்றுக் கொண்டுதான் வருகின்றன.

ஆனால் அஸ்திவாரத்தையே தகர்க்கும் முயற்சி ஒன்று அண்மையில் துவங்கியுள்ளது. விவாகம், சொத்துரிமை போன்ற விஷயங்களிலும் கூட நாடு முழுவதுக்கும் ஒரேவிதமான சிவில் சட்டம் இயற்ற விரும்புவதாக அரசாங்கம் அறிவித்து அதற்கான ஆரம்ப ஏற்பாடுகளைத் துவக்கியுள்ளது. ராஜ்ய அரசாங்கங்கள் தம் கருத்துக்களைத் தெரிவிக்குமாறு கோரப் பட்டுள்ளன. முஸ்லிம்களுக்கு மட்டும்தான் இப்போது தனிப்பட்ட சட்டம் இருந்து வருகிறது, அதை ஒழித்து அனைவரையும் ஒரே சட்டத்தின் கீழ் கொண்டு வருவதே அந்த நடவடிக்கையின் உட்கருத்து என்பது சுற்றறிக்கையில் தெளிவாகக் கூறப் பெற்றுள்ளது.

இந்த முயற்சி, விரும்பத்தகாதது. விஷமத்தனமானது, முஸ்லிம்களின் அடிப்படை மத உரிமைகளில் அநாவசியமாகத் தலையிடுவது என்பதைத் தலைவர் காயிதெ மில்லத் அவர்களும் மற்றுமிரு முஸ்லிம் லீக் பாராளுமன்ற உறுப்பினர்களும் சேர்ந்து வெளியிட்டுள்ள அறிக்கை ஒன்றில் மிகத்தெளிவாகவும் ஆணித் தரமாகவும் விளக்கியுள்ளார்கள்.

முஸ்லிம் சமுதாயம் இத்தலையீட்டை வன்மையாக எதிர்க்கிறது என்பதை சர்க்கார் உணர்ந்தே இருக்கிறார்கள். அண்மையில் ராஜ்ய அரசாங்கங்களுக்கு அவர்கள் அனுப்பியுள்ள சுற்றறிக்கையிலும் அது குறிப்பிடப் பெற்றுள்ளது.

அப்படியிருந்தும் ஆளுங்கட்சியினர் இந்த நடவடிக்கை எடுக்கத் துணிவதைப் பார்க்கும்போது அவர்களுடைய நோக்கம்தான் என்னவாக இருக்கும் என்ற ஐயம் நமக்கு எழுகிறது.

இந்திய அரசியல் சாஸனம் தனது 25,29ஆம் பிரிவுகளின் கீழ் வழங்கியுள்ள மத சுதந்திரத்தை, பாராளுமன்றத்தில் தனக்குள்ள மெஜாரிட்டி பலத்தைக் கொண்டு, ஜனநாயகத்தின் பெயரால், பறித்துக்கொள்ள ஆளும்கட்சி முயலுமேயானல் அதைவிட அறியாமை வேறென்றிருக்க முடியாது.

சீனவில் முஸ்லிம்களின் மத உரிமைகள் பறிக்கப் படுவது பற்றி இந்திய அரசாங்கத்தின் பிரசாரப் பிரிவு அடிக்கடி அறிக்கைகள் வெளியிட்டு வருகிறது. அங்கு சர்வாதிகாரிகள் செய்வது போன்ற ஒரு செயலே இங்கு ஜனநாயகத்தின் பேரால் செய்தால் மட்டும் அது சரியாகிவிடுமா ?

நூற்றுக்கு இருபதுக்கும் குறைவாகவே உள்ள முஸ்லிம்கள் தங்கள்சொந்த வாழ்க்கை முறையை பாக்கியுள்ள எண்பது சதத்தினரும் விரும்புகிற முறையில்தான் மாற்றிக்கொள்ள வேண்டுமா என்பதுதான் இப்போதுள்ள கேள்வி.

வேறு எந்த ஜனநாயக நாட்டிலாவது சிறுபான்மையினர் தத்தம் மதக் கோட்பாடுகளைப் பின்பற்றும் விஷயத்தில் பெரும்பான்மையினர் தலையிட்டுத் தங்களுடைய விருப்பத்தை அவர்கள் மீது திணிக்கின்றனரா ?

நம் நாட்டின் சிறந்த நட்புநாடாக விளங்குவதும், இந்தியாவைப் போல சோஷலிஸத் தத்துவத்தில் நம்பிக்கை கொண்டதுமான ஐக்கிய அரபுக் குடியரசையே உதாரணத்துக்கு எடுத்துக் கொள்வோம். அங்கு முஸ்லிம்களின் சட்ட திட்டங்களையே ஆங்குள்ள கிறிஸ்தவ சிறுபான்மையினரும் பின்பற்ற வேண்டுமென அவர்கள் கட்டாயப் படுத்தப் படுவதில்லை.

தனது சிறுபான்மையினர்களை சரிவர நடத்துவதில்லை என்று நாம் குற்றம் சாட்டும் பாக்கிஸ்தானிலேகூட முஸ்லிம் பெரும் பான்மையினர் இயற்றும் சட்டங்களின்படியே ஹிந்துக்கள் தங்கள் வாழ்க்கை முறையை மாற்றிக் கொள்ள வேண்டும் எனக் கூறப்படுவதாக நமக்குத் தெரியவில்லை.

முஸ்லிம்களைப் பெரும் பான்மையினராகக் கொண்ட காஷ்மீர் அரசாங்கமும், கிறிஸ்தவர் பெரும்பான்மையினராக வாழும் நாகாலாந்தின்அரசாங்கமும் மத்திய அரசின் முயற்சிக்குஎதிர்ப்பு தெரிவித்துள்ளன எனத் தெரிகிறது.

சென்னை அரசாங்கமும் இந்த ராஜ்யத்திலுள்ள முஸ்லிம்களின் எதிர்ப்பைக் கருத்தில் கொண்டு, அந்த யோசனையைக் கைவிடும்படி மத்திய அரசுக்கு ஆலோசனை வழங்க வேண்டுமெனக் கோருகிறோம்.




## உத்தம பாளையத்தில் நடந்த அக்கிரமம்!

மஸ்ஜிது ஒன்றின் வருமானத்திலிருந்து வக்பு போர்டுக்குச் சேரவேண்டிய பகுதிப் பணம் நிர்வாகத்தினரால் செலுத்தப்படவில்லை என்ற காரணத்திற்காக தொழுகை நடைபெறுவது தடைசெய்யப்பட்டு பள்ளிவாசல் இழுத்துமூடி பூட்டப்பட்டதோடு அதையொட்டிய கப்ருஸ்தானமும் கூட அடைக்கப்பட்ட அக்கிரமம் உத்தமபாளையத்தில் நடைபெற்றதாகத் தெரிகிறது. நாகரிகமான முறையில் ஆட்சி நடக்கும் எந்த நாட்டிலும் நடைபெருத அருவருக்கத்தக்க இச் சம்பவம் நமது தமிழ் மாநிலத்தில் நடைபெற்றிருப்பது சென்னை அரசாங்கத்துக்கே இழுக்கைத் தருவதாகும். சட்டத்தைத் தவருன வகையில் பயன்படுத்தி ஒரு சமுதாயத்தின் உணர்வையே புண்படுத்திவிட்ட அத்தகைய "அத்து" மீறிய செயல் நடைபெறக் காரணமாக இருந்த அதிகாரிகளின் மீது அரசாங்கம் தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டும். இத்தகைய செயல்கள் இனியும் வேறெங்கும் நிகழாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

வரிப்பணம் செலுத்தும்படி நிர்ப்பந்தப் படுத்துவதற்கு இதைத் தவிர வேறு வழிகள் எவ்வளவோ உண்டு. வரி செலுத்தத் தவறிய நிர்வாகத்தினர்மீதே நடவடிக்கை எடுத்திருக்கலாம். அவ்வாறு பூட்டப்பட்ட பின்னும் பணம் செலுத்தப்படாதிருந்தால், இதர தனிப்பட்ட மனிதர்களின் சொத்துகள் சம்பந்தப்பட்ட விவகாரங்களில் செய்வதுபோல, பள்ளிவாசல் கட்டிடத்தையே ஏலத்தில் விற்று வரித் தொகையை எடுத்துக் கொண்டிருப்பார்களா என்று கேட்க விரும்புகிறோம்.

தொழுகை தலங்களான மஸ்ஜிதுகளையும் மற்ற வக்புகளைப் போல ஒன்ருகப் பாவித்து வரி பாக்கியை வசூலிப்பதற்கு ரெவின்யூ அதிகாரிகளின் உதவியை நாடிய வக்பு போர்டாரின் செயலும் கண்டனத்துக்குரியது. ரெவின்யூ அதிகாரிகள் வழக்கமாகக் கையாளும் முறைகள் அவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

இதற்கெல்லாம் காரணம் முஸ்லிம் பொதுமக்களின் உண்மையான பிரதிநிதிகள் வக்பு போர்டில் அங்கம் வகிக்காததுதான். ஆளுங்கட்சியினரைத் திருப்திப்படுத்துவதையே நோக்கமாகக் கொண்டு முஸ்லிம் சமுதாயத்தோடு ஒட்டாமல் வாழ்பவர்களையே ஆட்சியாளர் தேடிப் பிடித்து அத்தகைய பதவிகளுக்கு நியமிக்கிருர்கள். இந்த நிலைமை மாறினுல்தான் நாம் மேலே எடுத்துக் காட்டியது போன்ற தவறுகள் நிகழாமலிருக்கும்.

## ஊதாண்டின் உயரிய பணி

கடந்த சில மாதங்களாக உலக நாடுகள் அனைத்துக்கும் கவலை தரத்தக்க நிலைமை

யொன்று ஏற்பட்டிருந்தது. ஐந்தாண்டுகளாக ஐ. நா. பொதுச் சபையின் பொதுக் காரியதரிசியாய்த் திறம்பட பணியாற்றி வந்த ஊதாண்ட் அவர்கள் அடுத்த ஐந்தாண்டு காலத்திற்கும் தொடர்ந்து பணியாற்ற தம்மால் முடியாது என முதலில் அறிவித்ததே அதற்குக் காரணம். எல்லா வல்லரசுகளும் ஏற்றுக்கொள்ளத்தக்க தகுதியுடைய ஒரு பொதுக் காரியதரிசி கிடைப்பது அவ்வளவு சிரமமானது. பல ஆண்டுகளுக்கு முன்பாக ஐ. நா பொதுக் காரியதரிசியைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் வல்லரசுகளுக்குள் கருத்து வேற்றுமை தோன்றி ஐ. நா. ஸ்தாபனமே குலைந்து போகுமோ என்ற அச்சம் ஏற்பட்டது. மீண்டும் அத்தகைய நிலைமை தோன்றக் கூடுமோ என்று கவலை கொண்டு இந்தியப் பிரதமர் உட்பட உலகத் தலைவர்கள் அனைவருமே அவருக்கு வேண்டுகோள் விடுத்தனர். அனைத்துலக விருப்பத்திற்கு இணங்கி தம் எண்ணத்தை மாற்றிக்கொள்ள ஊதாண்ட் அவர்கள் இசைந்தது உலக ஸ்தாபனத்திற்கும் பொதுவாக உலக சமாதானத்திற்குமே நல்லதாகும்.

உலகத்தை பாதிக்கும் எந்தப் பிரச்னையையும் ஆதிக்கப் போட்டி மனப்பான்மையோடு நோக்கும் வல்லரசுகளின் விருப்பு வெறுப்புகளுக்கு அஞ்சாது சமாதானத்தைக் காக்கும் பணியில் பெரும் வெற்றி கண்டு வந்துள்ளவர் ஊதாண்ட் அவர்கள். அவருடைய சீரிய பணி தொடர்க என்று அவரை வாழ்த்துகிறோம். அவருடைய உருவப்படத்தையும் இம்மாத இதழின் அட்டையில் பெருமையுடன் வெளியிடுகிறோம்.

# கண்டதும் கேட்டதும்



"ரபீக்"

## இருதய நோயா?

நம் நாட்டில் பலர் இருதய நோயால் அவதிப்படுகிறார்கள். இருதய நோயாளிகள் எந்த வேலையிலும் ஈடுபடக் கூடாது, முழு நேரம் ஓய்விலேயே இருக்க வேண்டும் என்று டாக்டர்கள் கூறுகிறார்கள். ஆனால் அண்மையில் நம் நாட்டிற்கு வந்திருந்த அமெரிக்காவின் புகழ்பெற்றஇருதய நோய் டாக்டர் பால். டி. வைட் என்பவர் இருதய நோயாளிகளுக்குச் சில அறிவுரைகள் கூறியுள்ளார். அவை "இருதய நோயாளிகள் எப்போதும் சுறு சுறுப்பாக ஏதாவது ஒரு வேலையில் ஈடுபட்டிருக்க வேண்டும். தினமும் ஒரு மணிக்குள் நான்கு மைல் நடக்க வேண்டும். எப்போதுமே கார் பயணம் செய்து கொண்டிருக்கக்கூடாது. ஆனால் தானே கார் ஓட்டிச் செல்வது நலம். சைக்கிள் பயணம் பயனுடையது. எப்போதும் வேலை செய்துகொண்டிருப்பவர்களை இருதய நோய்பற்றாது. இருதயநோய் வரக் காரணங்கள் உண்டு. 1. மிதமிஞ்சிய உணவு. 2. புகை பிடித்தல். 3. தேகப் பயிற்சி இன்மை. புகைபிடிப்பதால் சுவாசக்குழாய்கள் பாதிக்கப்படுகின்றன. இதனால் இருதயத்திற்கு நல்ல-புதிய-பிராணவாயு செல்வதில்லை தினமும் தேகப்பயிற்சி செய்து வந்தால் இருதய நோயாளிகள் குணமடைந்து வருவர். எப்படிப்பட்ட தேகப்பயிற்சி செய்ய வேண்டும் என்பதை டாக்டரிடம் ஆலோசித்து செய்து வர வேண்டும். இந்தியாவில் 30 வயதுக்குட்பட்ட பல இளைஞர்கள் இருதய நோயால் பீடிக்கப்பட்டிருப்பதை நான் காண்கிறேன். நான் கண்டவர்களில் பெரும்பான்மையானவர்கள் சைவ உணவு உண்பவர்கள்; அவர்கள் அதிகமாக நெய் உபயோகிப்பவர்கள் என்றும் கூறினார்கள். நெய்யில் நிறைய கொழுப்பு சத்து இருப்பதால் இருதய நோய் அவர்களை உடனே பற்றுகிறது. நன்றாக உழைக்கும் உழவர்கள் யாரும் இருதய நோயால் அவதிப்படுவதை நான் பார்த்ததில்லை. ஆகவே இருதய நோயைத் தடுக்க நன்றாக உழைக்க வேண்டும், தேகப் பயிற்சி செய்ய வேண்டும் ஆண்டுக்கொரு முறை வைத்தியச் சோதனை செய்து கொண்டு முன் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்."

டாக்டர் பால். டி. வைட் 80 வயதையடைந்தவர் தினமும் பலமைல்கள் நடக்கிறார். தோட்ட வேலைகளையும் சளைக்காமல் செய்கிறார். இவர் அமெரிக்காவின் பழைய ஜனாதிபதி ஐஸனோவருக்கு 11 ஆண்டு வைத்திய ஆலோசகராக இருந்தவராவார்.

## முன்னேற்றம்!

நம் இந்திய முதல் பார்லிமெண்டில் பத்தாவது வகுப்பிற்குக் கீழ் படித்தவர்களின் எண்ணிக்கை ஏழு. இரண்டாவது பார்லிமெண்டில் அவர்களின் எண்ணிக்கை பதினேழு மூன்றாவது பார்லிமெண்டில் நாற்பத்தி ஒன்று. அதே உயர்வு விகிதாசாரப்படி பார்க்கப்போனால் நான்காவது பார்லிமெண்டில் நூற்றுக்கு மேற்பட்டவர்கள் பத்தாவது வகுப்பையும் பார்க்காதவர்களாக இருப்பார்களோ என்று ஒரு ஆங்கிலப் பத்திரிகை சந்தேகப்படுகிறது!

## கிளே! ஓய் கிளே!

கிளே என்பவர் அமெரிக்க நீக்ரோ குத்துச்சண்டை வீரர். இவர் சில ஆண்டுகளுக்கு முன்பு இஸ்லாத்தைத் தழுவி முஹம்மதலி கிளே என தன் பெயரை வைத்துக்கொண்டார். உலகிலேயே சிறந்த குத்துச்சண்டை வீரரான இவர் மிகப் பெரிய மல்லர்களையெல்லாம் வீழ்த்திக் கொண்டு வருகிறார். இஸ்லாமிய முறைப்படி ஒழுக மறுத்த நீக்ரோ மனைவியை விவாகரத்து செய்துவிட்டார். இவர் மல்யுத்தத்திலேயே பல லட்சங்களைத் திரட்டிவிட்டார். சிறந்த இஸ்லாமியர். இவரை யாராவது "கிளே" என்று கூப்பிட்டால் திரும்பிப் பார்க்க மாட்டார். "முஹம்மதலி கிளே" என்றால் சட்டென்று திரும்பிப்பார்ப்பார். ஒரு சமயம் "பாகிஸ்தானில் உள்ள புகழ் பெற்ற முஸ்லிம் குத்துச்சண்டை வீரரிடம் போட்டி போடுவீர்களா" என்று கேட்டபோது முஹம்மதலி கிளே 'முடியாது' என்று மறுத்துவிட்டார். காரணம் "நம் இருவரில் யார்தோற்றாலும் ஒரு முஸ்லிம் தோற்றான் என்ற பெயர் தானே வரும்."

## குமரிப்பெண்!

நபிகள் நாயகம் அவர்கள் ஒரு முறை தள்ளாடும் கிழவி ஒருவளிடம் "கிழவிகள் சுவர்க்கம் புகுவதில்லை" என்று கூறினார்கள். இதனைக்கேட்ட கிழவி கதறி அழ ஆரம்பித்தாள். நபிகள் பிரான் அவர்கள் சிரித்துக் கொண்டே "கிழவிகளெல்லாம் குமரிகளாக மாற்றப்பட்ட பின்னரே சுவர்க்கத்தில் அனுமதிக்கப்படுவர்" என்று கூறிய பின்னர் கிழவியின் ஓலம் ஓய்ந்தது.

## குடும்பக் கட்டுப்பாடு

இம்மாதம் முதல் இரண்டு வாரங்கள் குடும்பக் கட்டுப்பாடு வாரங்களாக அரசாங்கம் கொண்டாடி வருகிறது. அதையொட்டி எழுந்த சிந்தனைகள் இவை!

நம் நாட்டில் மக்கள் தொகை அதிகரித்துவருவதால் ஒவ்வொருவரும் மூன்று குழந்தைகளுக்கு மேல் பெறக் கூடாது என்பது அரசாங்கத்தின் திட்டம். இதற்காக அரசாங்கம் பல கோடி ரூபாய்களைச் செலவழித்து வருகிறது. கர்ப்பத்தடை குடும்பக் கட்டுப்பாட்டின் ஒரு அம்சமாகும். ஆண்கள் செய்துக் கொள்ளும் ஆபரேஷனுக்கு வேஸக்டமி என்று பெயர். பெண்கள் செய்துக் கொள்ளும் (கர்ப்பத்தடை) ஆபரேஷனுக்கு ஸ்டெரிலைசேஷன் என்று பெயர். அரசாங்க ஆஸ்பத்திரிகளில் இந்த ஆபரேஷன்கள் செய்யப்படுகின்றன. ஆண், பெண் ஆபரேஷனுக்கு அரசாங்கம் நபர் ஒன்றுக்கு ரூபாய் 30 விதம் வெகுமதி

கொடுக்கிறது. பெண்கள் 'லூப்' பொருத்திக் கொண்டால் நபர் ஒன்றுக்கு ரூபாய் 5 வீதம் பரிசளிக்கிறது. ஆபரேஷன் செய்து கொள்ள நபர் ஒன்றுக்கு ரூபாய் 10 வீதம் சன்மானம் கொடுக்கப் படுகின்றது கார்பரேஷன், முனிசிபாலிடி போன்ற அலுவலகங்களில் குடும்பக் கட்டுப் பாட்டுக்கான மாத்திரைகள் மற்ற நூதன சாதனங்கள் மக்களுக்கு இலவசமாக கொடுக்கப்படுகின்றன இந்த குடும்பக் கட்டுப்பாட்டால் நல்ல பலன்களை விட கெட்ட பலன்கள்தான் அதிகரித்து வருகின்றன. திருமணமாகாத இளம் வயதினர்தான் அதிகம் இந்த குடும்ப கட்டுப்பாடு சாதனைகளை உபயோகிக்கின்றார்கள் என விஷய மறிந்தவர்கள் வெளிப் படையாகவே பேசுகிறார்கள்.

குடும்பக்கட்டுப்பாடு பொருளாதாரக் கொள்கையாகும். இதனை அரசியல் கொள்கையாக்க சில அரசியல் வாதிகள் முயலுகிறார்கள். முஸ்லிம்கள் குடும்பக் கட்டுப்பாட்டை ஆதரிப்பதில்லை இதனால் முஸ்லிம்களின் ஜனத்தொகை அதிகரிக்கும், மற்ற வகுப்பாரின் ஜனத்தொகை குறையும் என்று அங்கலாய்க்கின்றார்கள் ஆனால் உண்மை அப்படியல்ல முஸ்லிம்களும் கர்ப்பத்தடை செய்துக் கொள்கிறார்கள் என்று சுகாதார அமைச்சர் கனம் ஜோதியம்மாள் கூறுகிறார்.

கற்பனையல்ல; உண்மையில் நடந்தது இது. ஒரு பெரிய அரசாங்க அதிகாரிக்கு இரண்டு ஆண்கள், ஒரு பெண் குழந்தை. அரசாங்க 'கோட்டா'படி தனக்கு பிள்ளைகள் இருந்ததால் அவர் கர்ப்பத்தடை ஆபரேஷன் செய்துக்கொண்டார். ஆபரேஷன் செய்துக்கொண்ட ஆறுமாதத்திற்குப்பிறகு ஒரே அருமை மகள் திடீரென காலமாகி விட்டாள். மீண்டும் அவரால் அவர் விரும்பிய பெண்குழந்தையை அடைய முடியவில்லை. மீளாத் துயரத்தில் மூழ்கிக்கிடக்கின்றார். விமோசனம் இருந்தால் கூறுங்கள். அவரிடம் சொல்லிவிடுகிறேன்!

# திருக்குர்ஆன் தெளிவுரை

## 96. ஜக்காத் எனும் தானம்

(ஜக்காத்தென்னும்) தானம் 'ப:கீர்களுக்கும், மிஸ்கீன்களுக்கும், அ(ந்த நிதி)தனை வரவு செலவு செய்யும் ஊழியர்களுக்கும் (சத்தியத்தின் பக்கல்) சாயுமாறு எவர்களுடைய உள்ளங்கள் செய்யப் படுகின்றனவோ அப்படிப் பட்டவர்களுக்கும், அடிமைகளுக்கு (உரிமை வழங்குதற்கு)ம், கடன் பட்டவர்களுக்கும், அல்லாஹ்வின் வழி(யில் செலவு செய்கின்றமை)க்கும், வழிப் போக்கருக்குமே உரியதாயிருக்கிறது.— அல்லாஹ்விடத் திருந்து (வந்து)ள்ள சட்டம் (இது). இன்னம், அல்லாஹ் (எல்லாம்) அறிந்தவன், விவேகம் மிக்கவன். 9 : 60

இஸ்லாமிய குடியரசின் பொருளாதார அடிப்படை ஸ்தாபனம் 'ஜ(க்)காத்தாகவே விளங்கி வருகிறது. இங்கே அது ஸத(க்)காத்தென்று அழைக்கப் படுவதுடன் ''அல்லாஹ்விடத் திருந்து வந்துள்ள சட்டம் இது'' என்றும் அறிமுகப்படுத்தப் படுகிறது. எனவே, இஃது 'ஏழை விகிதமே'' யாகும். இதனை அவரவர் இஷ்டத்துக்கு வீண்விரயம் செய்வதோ, அல்லது தில்லுமுல்லுகள் செய்வதோ அறவே தகாததாகும். அரசாங்கப் பொக்கிஷசாலையாகிய 'பைத்துல்மால்' என்னும் பொது கஜானாவில் ஒவ்வொரு மூமினும் தன்வயமுள்ள கைம்முதலிலிருந்து 2.50 சதவிகிதம் ஆண்டுதோறும் ரொக்கத்தை அல்லது பண்டத்தைச் சேர்ப்பித்துவிட வேண்டும். இவ்வாறு சேகரிக்கப்படுகிற அரசாங்க நிதியிலிருந்து இங்குக் குறிப்பிடப்படுகிற எட்டு வகை இனத்தினருக்குச் சகாயம் நல்கப்படுதல் வேண்டும். இவர்களின் இலக்ஷணம் என்னவென்றால்: 'பக்(க்)கீர் என்பவன் ஜ(க்)காத்கூடக்கொடுக்க இயலாத பரம தரித்திரன்; மிஸ்கீன் என்பவன் 24 மணி நேரத்துக்கிடையில் ஒரு கவளம் அன்னங்கூடக் கிடைக்கப்பெறாத மிக எளியோன்—ஏழை மாணவர், ஏழைத் தொழிலாளி, ஏழை வியாபாரி ஆகியவர்கள் இந்த இனத்தில் சேர்வர். 'வரவு செலவு செய்வோன்' என்பவன், அரசாங்கத்தில் உத்தியோகம் ஏற்று, ஜக்காத் பணத்தை வசூ

லித்து வினியோகிக்கிற கணக்குப்பிள்ளை அல்லது ஆபீஸர்; அவருக்குப் பக்கபலமாயுள்ள உதவியாட்கள். இதனுல் இந்த ஜக்காத் நிதி பொதுவான அரசாங்கத்தால், அல்லது ஒரு பகிரங்க சங்கம், சமுதாயம், ஜமாஅத் போன்ற கூட்டத்தினரால் வசூலிக்கப்பட்டு, நிர்வகிக்கப்பட்டு பட்டுவாடா செய்யப் பட்டுக் கண்காணிக்கப்பட வேண்டுமென்பது விளங்கக் கிடக்கின்றது. எனவே, ஜக்காத்தென்பது அவரவர் மனம்போனபடி செலவு செய்யப்படக்கூடிய இனமன்று. இந்த ஆயத்தில் சொல்லப்பட்டுள்ளபடி இக்காலத்தில்ஜக்காத் பணம் வசூலிக்கப்பட்டு வினியோகிக்கப்படுவது கிடையாது. 'சத்தியத்தின் பக்கல் உளம் சாய்வோன்' என்பவன்புதிதாக இஸ்லாத்தைத் தழுவும் நவ்முஸ்லிம்; தீனுல் இஸ்லாத்தைப் போதித்தால் அதனைச் செவி சாய்த்துக் கேட்கும் ஜனங்கள் என்றும் எங்குமே இருக்கிருர்கள். இத்தகைய இஷாஅத்துக்குப் பணம் தேவைப்படுகிறது. இதற்கு ஜக்காத் தொகையை வெகு தாராளமாய்ச் செலவு செய்யலாம்; இவ்வாறு இஸ்லாத்தை ஏற்போருக்கு இத்தொகையினின்று உதவி புரியலாம் மக்கமா நகர் நபிபெருமானால் கைப்பற்றப் படுமுன்னே இஸ்லாத்தை எதிர்த்து நின்ற அவ்வூர்வாசிகள், அது பிடிபட்ட பின்னர் தீனுல் இஸ்லாத்தைத் தழுவிக்கொண்டார்கள். "சத்தியத்தின் பக்கல் சாயுமாறு அவர்களுடைய உள்ளங்கள் செய்யப்பட்டு விட்டபடியால்," ஜக்காத் வசூலிலிருந்து ஒரு தொகை அந்த நவ்முஸ்லிம்கட்கு வழங்கப்பட்டது. அடிமைகள் என்னும் 5-ஆவது இனம் நாளடைவில் முஸ்லிம்களிடையே இல்லாமல் ஒழியவேண்டுமாகையால், அந்த அடிமைகளைச் சொத்துக்களாக வைத்திருக்கும் எஜமானர்களிடத்திருந்துரொக்கங் கொடுத்து வாங்கி விடுதலையளிக்க விரும்புவோர் மற்ருேர் இனமாவர். 6-ஆவது இனத்தினுகிய 'கடன் பட்டவன்' என்போன். அல்லாஹ் ரசூலுக்குப் பயந்து, நேர்மையான தொழில் நடத்தி, அதில் கஷ்டங்களை யனுபவித்து நஷ்டமுற்று, வாங்கிய கடனையடைக்க முடியாமல் அவதிப்படுவோன். கள்ளவர்த்தகம் புரிந்தோ, சுயமைத் தனமாய் நடந்தோ, குடி கூத்தியால் நலிவுற்ருே, பேராசையால் பொருளிழந்தோ, ஹருமான காரியங்களைச் செய்யப் பொருளீந்தமையால் கைம்முதலிழந்தோ

## உண்மையான முஸ்லிம்

ஒழுக்க முள்ளவனுகை இரு; மக்களில் நீயே சிறந்த பக்தன், போது மென்ற மனப்பான்மை யுள்ளவனுகை இரு; மக்களில் நீயே நன்றியுள்ளவன், உனக்காக எதை விரும்புகிருயோ அதையே மற்றவர்களுக்கு விரும்பு நீயே உண்மையான முஸ்லிம்.

-நபிமொழி
ஆதாரம்: இமாம் கஸ்ஸாலி

---

சூது விளையாடிச் சொத்துக்களைத் தோற்ருே, மோசடி வித்தையிலிறங்கி மோசம் போயோ கடனாளியாகிவிட்ட கயவர்கள் இவ் இனத்தில் சேரார். 7-ஆவது 'அல்லாஹ்வின் வழி' என்பது சுத்த சத்திய சன்மார்க்கத்தைப் பிரசாரம் செய்யும் ஸ்தாபனம், இஸ்லாமிய குடியரசைத்தற்காக்கும் ராணுவம், மார்க்க ஞானம் போதிக்கும் கல்விச்சாலைகள் பல்கலைக் கழகங்கள், எதிர்மதவாதிகளின் துர்ப்பிரசாரத்தைக் தகர்க்க நற்பிரசாரம்புரியும் அறிஞர்கள், அவர்கள் எடுக்கும் முயற்சிகள் முதலிய சகலவற்றையும் உள்ளடக்கிக் கொண்டிருக்கிறது 8-ஆவது 'வழிப்போக்கன் என்பவன், பிரயாணம் செய்கையில் கைப்பொருளை இழந்து பரிதவிப்பவன். அல்லது கொணர்ந்த காசு செலவழிந்து போய் மேற்கொண்டு தன் பயணத்தைத் தொடர்ந்து எல்லையை எட்ட முடியாமல் சங்கடப்படுபவன். அல்லது நோயினுல்வாடி நலிவுற்றுத் தாயகம் திரும்ப ஏங்கிக் கிடப்பவன் ஆவான்: இவன் எம்மதத்தினனுயினும் சரியே. இந்த எட்டுவகை இனத்தைப் பற்றியும் கூர்ந்து நோட்டமிடுவீர்களே யானுல், அல்லாஹ் வகுத்துத் தந்திருக்கும் பொருளாதார நிதித்திட்டத்தின் மிக அபூர்வமான அழகை நுகர்ந்துக் கொள்வீர்கள்.

ஜக்காத் திட்டத்தால் வட்டி ஒழிந்து போகும்; சுங்கவரியும். கலால் வரியும் வருமானவரியும், விற்பனை வரியும் தீர்வைகளும் விதிக்கவேண்டிய அவசியமில்லாமற்போகும். மக்கள் அனுவசிய வரிச்சுமையில்லாது சுபிக்ஷமாய் வாழ்வர். நிரந்தர சோஷலிஸத்தைச் சுகமாக அனுபவிக்க ஜக்காத் ஒன்றுமட்டுமே வழிவகுத்துக் கொடுக்கிறது. ஆனுலும் இற்றை நாள் முஸ்லிம்கள் இந்த மகத்துவங்களை யுணராமல், சரியான கணக்குப் பார்த்து இரண்டரைசதவிகிதம் ஈயாமல், தத்தம் இஷ்டத்துக்கு ஜக்காத் என்ற பெயரால் பைசாக் காசுகளை மாற்றிவைத்துக் கொண்டு பிச்சைக்காரர்களுக்கு ஒவ்வொன்ருக ஈந்து பாழ்படுத்தி விடுகிருர்கள்; அல்லது சில துணிமணிகளை வாங்கித் தர்மம் வழங்குகிருர்கள். பிச்சைக்காரர்களில்லாமல் ஒழிவதற்காக இறைவன் ஜக்காத்தைக் கடமையாக்கியிருக்க, இன்றைய முஸ்லிம்கள் அனேகர் தங்கள் பணத்தை விரயமாக்கி இலக்ஷக்கணக்கில் பிச்சைக்காரப் பட்டாளத்தை அன்ருடம் அதிகம் உற்பத்தி செய்து விட்டுவிடுகிருர்கள்.

(அல்ஹாஜ் பா. தாவூத்ஷா ஸாஹிப் அவர்களின் குர்ஆன் மஜீத் விரிவுரையிலிருந்து)

---

## வாழ்த்துகிருேம்

திருவிடச்சேரி ஜனுப் எஸ். அப்துல் மஜீது (V. H. M.) அவர்களின் புதல்வர் எஸ். அன்வர்பாஷா பி. காம். அவர்களுக்கு ஆண் குழந்தை பிறந்த செய்தி கேட்டு மகிழ்கிருேம். தாயும் குழந்தையும் நீடூழி வாழ்க!

# திருமணம்

கே. எம். அப்துல் ரெஜாக் பி.ஜே.ஜி. அவர்களின் புதல்வி நூர்ஜஹான் பேகத்திற்கும், நாச்சியார் கோவில் ஜி. ஏ ஹபீப் முகம்மது அவர்களின் புதல்வர் இஸ்மத்பாஷா அவர்களுக்கும் 27-11-66ல் சிங்கப்பூரில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.



குடியாத்தம் 'S' பீடி பாக்டரி உரிமையாளர் ஹாஜி. ஏ. ஹபீபுர் ரஹ்மான் அவர்களின் திருக்குமாரத்திற்கும், மேல்விஷாரம் ஜனுப் ஹாஜி மலக் கிஜர் ஹுஸைன் சாஹிப் அவர்களின் குமாரர் ஜனுப். எம். அப்துல் ஹலீம் அவர்களுக்கும் நவம்பர் 20-ஆம் தேதியன்று குடியாத்தம் சுல்தான் பேட்டையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.



நாகை எ. கே. முகம்மது யூசுப் ராவுத்தர் அவர்களின் குமாரர் ஷேக் அலாவுதீன் அவர்களுக்கும், நாகூர் எம். முகம்மது யூசுப் அவர்களின் குமாரி ஹபீப் நாச்சியார் அவர்களுக்கும் 10-12-66-ல் திருமணம் சிறப்பாக நடைபெற்றது

வாழ்க மணமக்கள்!



## வாழ்க மணமக்கள்



வழுத்தூர் ஜனுப் எம். ஏ. முகம்மது இபுருஹீம் (அட்வகேட்) அவர்களின் செல்வர் ஹாஜி. எம். முஹம்மது மஸ்தான் B. Sc, (Educational Service, Brunei Borneo) அவர்களுக்கும் பண்டாரவாடை ஜனுப். எம். டி. அப்துல் கரீம் அவர்களின் புதல்வி ஜொஹரா அம்மாளுக்கும் 13-12-66-ல் அய்யம்பேட்டை மணமகள் இல்லத்தில் சிறப்பாக திருமணம் நடைபெற்றது.

மணமக்கள் பன்னலங்களும் பெற்று நீடூழி வாழ எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகின்றோம்.

H. M. தாஜுத்தீன் B. E.
வழுத்தூர்.

M. P. A. ஜமீல், B Com.,
சக்கராப்பள்ளி,
அய்யம்பேட்டை.




# 24. நோன்பு என்னும் கேடயம்

"நோன்பு என்பது ஒரு கேடயம். அதைக்கொண்டு ஒருவன் தன்னை (தீய காரியங்களிலிருந்து) காத்துக் கொள்கிருன். எனவே, அவன் தீய பேச்சு பேசலாகாது. அறிவீனமான (பாபகரமான) செயலில் ஈடுபடலாகாது. மேலும் அவனோடு எவனேனும் சண்டைக்கு வருவாரு யினும் அல்லது அவனை வைதாலுயினும் "நான் நோன்பு நோற்கிறேன்!" என்று இருமுறை கூறிவிட வேண்டும். நோன்பு நோற்பவனின் வாயிலிருந்து வெளிப்படும் வாசனை இறைவனின் பால், கஸ்தூரியின் வாசனையை விடச் சிறந்ததாக இருக்கிறது. "அவன் எனக்காக தன் ஆகாரத்தையும், குடிப்பையும், சரீர இச்சையையும் துறந்துவிடுகிருன். நோன்பு நோற்பது எனக்காகவே ஆதலால் அதற்குரிய சன்மானத்தை நான் அளிப்பேன், மேலும் ஒரு நன்மையான செயல் அதைப் போலப் பத்து மடங்கு கூலியைக் கொண்டு வரும்" என்று அல்லாஹ் கூறுகிருன்" என்பதாக பெருமானர் (ஸல்) அவர்கள் சொன்னதாய் அபூஹுரைரா அறிவித்தார்.

[புகாரீ 30 : 2]

உணவு உண்பதும், பானம் பருகுவதும் கணவன் மனைவியரிடையே உறவு கொள்வதும் சாதாரணமாக அனுமதிக்கப்பட்ட காரியங்களாக இருக்க, ஒரு முஸ்லிம் நோன்பு காலத்தில் அவற்றைத் துறந்திருப்பது அல்லாஹ்வின் கட்டளைக்குப் பணிந்தே ஆகும். அச்செயல் இறைவனுக்கு எவ்வளவு உகந்தது என்பதை பெருமானர் அவர்களின் இவ் வாக்கு சுட்டிக் காட்டுகிறது. மேலும் தீமையான பேச்சும் செயலும் கோபமும் நோன்பாளியால் நிச்சயம் தவிர்க்கப்பட வேண்டும் என்றிருப்பதால் தீமையைத் தடுத்து நிறுத்தும் கேடயமாகவே நோன்பு விளங்குகிறது.

# முரசுக்கு அரசு

(திருவை கா. முகம்மது பாரூக் எம். ஏ.)

---

நேர்நிற்கும் பார்வை நிமிர்ந்திருக்கும் நெஞ்சம்
சீர்நிற்கும் கொள்கை சிதையாத சிந்தை

ஆழ்கடலின் அமைதி அகங்கவரும் அன்பு
வாழ்கவென வாழ்த்தும் வனப்பான கண்கள்

அறிவுக்குத் தந்தை அன்புக்குப் பிள்ளை
நிறைவுக்கு அன்னை நேயத்தில் அரசு

வளங்கொழிக்கும் உள்ளம் வாய்மைசேர் உரைகள்
களம்பழிக்கும் வீரம் காக்கின்ற எழுத்து

இணையாத இந்த இயல்பெல்லாம் ஒன்றாய்
இணைந்திருந்த வேந்தை இழந்திட்டோம் அல்லா(ஹ்)!

நலியாத உண்மை நம்பிக்கை சேர்ந்த
சலியாத உழைப்பு சாய்ந்ததெங்கே அல்லா(ஹ்)!

நாலைந்து ஆண்டாய் நல்'முரசு' ஓங்க
கோலேந்தி நின்றார் குரலெங்கே அல்லா(ஹ்)!

உள்ளிருக்கும் அன்பை உரையாலே கொட்டி
அள்ளியெமை அணைக்கும் அரசெங்கே அல்லா(ஹ்)!

உலையாத எந்தம் உளக்கருத்தைக் கேட்பாய்
நிலையாத உலகை நினைப்பூட்டும் அல்லா(ஹ்)!

முடிவுக்கு அரசே! முரசுக்கு அரசை
முடிவாக்கி நினைவை முடமாக்கி விட்டாய்

நின்கருணை நினைவால் நின்றிரங்கிக் கேட்போம்
எம்'முரசின்' தலைவர்க்கு ஏற்றம்தா அல்லா(ஹ்)!

# ரகசியம்!

'ஷேக்கோ'

"யாஸீன் வல் குர் ஆனில் ஹகீம். இன்னக்கலமினல் முர்ஸலீன அலாஸிராதின் முஸ்த கீம்..."

"முற்றிலும் ஞானம் நிறைந்த இந்தக் குர்ஆனின் மீது சத்திய மாக, எச்சரிக்கை செய்யப்படாத மூதாதைகளைப் பெற்ற, முற்றி லும் கவலையற்றிருக்கின்ற ஜனங் களுக்கு நீர் அச்சமூட்டி எச்ச ரிக்கை செய்யும் பொருட்டாக கருணையாளனுன வல்ல (இறை) வனால் அருளப்பெற்றது."

என்ற திருமறையின் அரும் உரையின் கருத்துச் செறிவுள்ள யாஸீன் சூராவின் வாசகங்கள், காற்றில் கலந்து கர்ணும்ருத கானமாய்ப் பரவிச்சென்று, சபை யோரின் காதுகளில் பட்டு மெய் சிலிர்க்க வைத்தன!

கனிந்து புகைந்து கொண்டி ருந்த ஊதுவத்தி, ரம்யமான மணத்தை எழுப்பி, கூடியிருந் தோரின் மனங்களையெல்லாம் தூய்மைப் படுத்திக் கொண் டிருந்தது.

அறையின் மத்திய பாகத்தில், அகலமான பலகைக் கட்டில் ஒன்றின்மீது வெள்ளைத் துணி கொண்டு மூடியபடி கிடத்தப் பட்டிருந்தது, நாகூர் மீருவின் சடலம்!

நாடிவந்த மக்களெல்லாம், துணியை நீக்கிக்கொண்டு, பிரே தத்தின் முகத்தைத் 'தீதார்' பார்த்து. மனம் நொந்தவர்க ளாய்த் திரும்பிக் கொண்டிருந் தார்கள் நெஞ்சை நெகிழ்விக்கும் பரிதா பகரமான அந்த 'மௌத்' நிகழ்ச்சி யைப் பற்றி, வந்தவ ரெல்லாம் வாயாத் துப்போய், பலவாறு கப் பேசித்தீர்த்துக் கொண்டிருந் தனர்.

"என்னங்க அதிசயமா இருக்கு! நேத்துக் காலையிலெதான் பாத் துப் பேசிட்டுப் போனேன். இன் னைக்கு மவுத்தாப்போனாருண்டா ய ருங்க நம்ப முடியும்?"-என்று, மௌத்தாகி விட்டிருந்த நாகூர் மீருவுக்கும் தமக்கும் முதல்நாள் ஏற்பட்ட சந்திப்பை எண்ணிக் கண்கலங்கக் கூறினார் ஒருவர்.

"அட என்னங்கணு நீஒண்ணு! நீ நேத்துச் சந்தித்ததைப் பத்திச் சொல்றே. நான் இப்பத்தானங் கணு, பஜ்ரு தொழுதுட்டு சந்திச் சுப் பேசிக்கிட்டிருந்தோம். சாயா வாங்கிக் கொடுத்தாரு, குடிச்சுட் டுப் போனேன். அதுக்குள்ளே இப்படியாயிருக்கு தெங்கணு!"- என்று, ஆருத்துயரின் மாரு நிலை யில் நின்று கூறினார், இன்னொரு வர்.

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த மற்றொருவர், "அது சரிங்க, இப்ப நல்லா இருந்தபோது, திடீர்ன்னு என்ன செஞ்சுச்சாம்? இதுக்கு முந்தி என்னமும் சீக்கா இருந்தாரா?"- என்று விவரம் கேட்டார்.

"சீக்காவது ஒண்ணுவது! கல் லுக் குண்டு மாதிரித் திரிஞ்சா ரப்பா! காலையிலே குளிச்சுட்டுப் பசியாறப்போனவரு நெஞ்சிலெ வலிக்குதுன்னுட்டு, தைலம் போட்டுத்தேச்சாராம். கொஞ்சம் மயக்கமாவும் இருந்ததாம். அதோட, படுக்கையிலெ படுத் தாராம். கொஞ்ச நேரத்துக்குப்

பின்னுலே, அவருசம்சாரம் வந்து கூப்பிட்டபோது, ரூஹா அடங்கிப் போயிக் கெடந்தாராம்!''— என்று, தாம் கேள்விப்பட்ட விவரங்களை யெல்லாம் கதை-கதையாகச் சொல்லி, கூடியிருந்தோரையெல்லாம் சஞ்சலத்துக்கு ஆளாக்கிக் கொண்டிருந்தார் மற்றொருவர்.

இன்னும் இரண்டொருவர், நாகூர் மீருவின் வரலாற்றைப் பற்றி யெல்லாம் பேசலாயினர்:

★ ★ ★

நாகூர் மீருவைப் பற்றி உங்களுக்கு யாருக்கேனும் தெரியுமா? பெரும்பாலும் உங்களுக்கெல்லாம் அவரைப்பற்றித் தெரிந்திருக்க முடியாது. ஆனால், அவரது ஊர்க்காரர்கள் அவ்வளவு பேர்களுக்கும், அவர் நன்ருகப் பரிச்சயமும், பழக்கமுமான வர்.

இளைஞர்கள், நடுத்தரமக்கள், வயது சென்ற பெரியார்கள், பெண்மக்கள்-இப்படியாக அனைவருக்கும், நாகூர் மீரு நல்லவிதமாகத் தெரிந்தவர் - பழகியவர்! பண்பும் குணமும் கொண்டவர்; ஈகையும் இரக்கமும் நிறைந்தவர்!

நாகூர்மீரு இளைஞராக இருந்த காலத்தில், சிலம்பு விளையாட்டில் கெட்டிக்காரத் தனம் பெற்று, பெரிய விளையாட்டுக்காரர் என்ற பெயரெடுத்திருந்தார். அதோடு, அவருடன் ஒத்த வயதினரான



இளைஞர்கள் பலருக்கும், சிலம்பம் சொல்லிக் கொடுத்து, பெரிய பாராட்டுகளையும், புகழையும் பெற்றிருந்தார். இளைஞர் உலகம் அந்த நேரத்தில, அவரை மொய்த்துக் கொண்டு திரியும் அளவுக்குப் பரிச்சயம் உள்ளவராக இருந்தார்.

பின்னர் மணமாகி, வாழ்க்கைப் பிரச்னைகளை சமாளிக்க வேண்டிய காலத்தில், 'சாயாக் கடை' ஒன்றை வைத்துக் கொண்டு உட்கார்ந்தார். சாயாக் குடிக்கும் மக்கள், அவர் கடையைத் தேடிவரும் அளவுக்கு, சாயாவை மிக அருமையாகப் போடுவார் அவர். அவர்போடக் கூடிய மாதிரியில், இப்போது எங்கே, யார் சாயாப் போடுகிறார்கள்!



சாயாக் குடிக்கும் மக்களில் பலர், கடன் சொல்லிவிட்டுச் செல்வார்கள். கடன் சொல்லளவிலேதான் இருக்குமே தவிர, கைக்குப் பணம்வந்து, கடன் தீர்ந்ததாக இருக்காது

இப்படி, நாகூர் மீருவை ஏப்பம் விட்டவர்கள் பலர். அப்படி ஏப்பம்விட்டு ஏமாற்றியவர்களைப் பற்றி அவர் கவலைப் படுவாரா என்றால், அதுதான் இல்லை.

''ஏங்கணு! காசு தரணுமேன்னு, கடைப்பக்கமே ஆளைக் காணோமேங்கணு காசுதராட்டா என்னங்கணு? உங்கிட்டெ காசு கேட்டனா நான்? கடைபக்கம் வந்துபோய்க்கிட்டு இருங்கணு'' என்று அன்பு ஊர கூறி, ஆதரவு காட்டி, அவர்களது கடன் காசை வஜா ப்பண்ணிவிட்டுவிடுவார் அவர்! அதைப்பற்றி யாராவது கேட்டால், ''கடனை ஏழைகளுக்கு தள்ளுபடி செய்யறது நல்லதுன்னு, ஆண்டவனே குர்ஆன்லெ சொல்றானே''—என்று காரணம் கூறுவார்.

இப்படி வியாபாரம் நடத்தினால் கடை கட்டுபடியாகுமா? சில வருடங்களிலேயே, 'கடையைத் தூக்கிச் சாத்திவிட்டு' விவசாய நிலங்களை மேல்பார்த்து விவசாயம் பண்ண முற்பட்டார். பூர்வீகச் சொத்தாகக் கொஞ்சம் நிலம் இருந்தது அவருக்கு.

விவசாயப் பொருள்கள் வீடு வந்து சேரும். நெல் போன்ற

தானியங்கள் வந்தால், தமக்கு வேண்டியதை வைத்துக் கொண்டு மற்றவைகளையெல்லாம் விற்றுவிடுவார். விற்பது ஒன்றும் வியப்பில்லை. ஆனால், அகவிலை கலம் 15-20 ரூபாயாக இருந்தால், அவர் விற்பதோ, 10-15 ரூபாயாகத்தான் இருக்கும் "ஏன் இப்படிக் குறைத்து விற்க வேண்டும்?"-என்று யாராவது கேட்டால், "ஆண்டவன் கிருபையாலெ நல்லவிதமாக விளஞ்சு வந்திருக்கு. ஆண்டவன் தந்த பலன்லெ, கொஞ்சத்தை ஏழைகளுக்கு-குறைஞ்ச விலையிலே குடுக்கிறதுலெ என்ன தப்பு? அவ்வளவும் சாவியாப் போயிருந்தாமட்டும், வயித்திலெயும் வாயிலெயும் அடிச்சுக்கிறலாமா?" என்று கேட்டு, விளக்கம் பண்ணுவார். கேட்டவர் வாயடைத்துப் போவார்!

இன்னும், ஏழைகள்—ஏழையாக உள்ள நெல்குத்திப் பிழைக்கும் பெண்கள் ஐந்து பத்து ரூபாய் கடனாகச் சொல்லிச்சென்றாலும், சரி சொல்லி அனுப்பி விடுவார். ஆனால், அந்தப் பணம் பெரும்பாலும் வந்தாலும் வரும் வராவிட்டாலும் இல்லை. அதைப் பற்றி, மறுபடி அவர் கேட்கவும் மாட்டார்.

இப்படியாக ஏழைகளின் நண்பனாய், எளியோரின் துணைவனாய், எல்லோருக்கும் நல்லோனாய் நின்று வாழ்ந்து வந்தார் நாகூர் மீரு.

தம் வேலைகளையெல்லாம் முடித்துக்கொண்டு, பள்ளிக்குச் சென்று தொழவும் தவற மாட்டார் அவர். அவரோடு ஒத்த வயதுடைய நண்பர்கள், ஒவ்வொரு நேரமும் பள்ளியில் அவரை எதிர் பார்த்தவர்களாகவே இருப்பார்கள். மக்ரிப் தொழுகைக்குப் பின், பள்ளியின் வெளிவராந்தாவில் அனைவரும் அமர்ந்து பேச முற்பட்டால், பலதரப்பட்ட பேச்சுக்களையும் பேசி குர்ஆன் ஹதீஸ் அறிவுரைகளையும் எடுத்துக்கூறி அழகான சொற்பொழிவுகளே நடத்திக் காட்டி விடுவார் நாகூர் மீரு. மற்றவர்கள் வாய்பிளந்து கேட்டபடி இருப்பார்கள். இதனாலேயே அனைவரும் அவரை எதிர்பார்ப்பது வழக்கம்.

நோன்பு காலம் வந்து விட்டால், ஒருவாரத்துக்கு முந்தியே நோன்பு நோற்பதற்கான ஆயத்தங்களைச் செய்து, மற்றவர்களையும் நோன்பு நோற்கத் தூண்டிக் கொண்டிருப்பார்.

வீட்டுக்குச் சாமான் வாங்க' கடைத் தெருவுக்கோ சந்தைக்கோ போவாரானால், தம் தெருவிலுள்ள ஆண் துணை இல்லாத வீட்டாரிடமெல்லாம், 'உனக்கு என்ன வேணும்? உனக்கு எது வாங்கணும்? என்று கேட்டு, பணம்வாங்கிச்சென்று, சாமான்களையெல்லாம் வாங்கித்தோளில் தூக்கி வைத்துக் கொண்டு வருவதைப் பார்த்தால், மற்றவர்களெல்லாம் வியப்புற்று நிற்பார்கள்! இதில் இன்னொரு வேடிக்கை என்னவென்றால், சாமான் வாங்கச் சொல்'வார்களில் சிலர், 'காசு இல்லே; உங்கள் காசிலேயே வாங்கிவாங்க. அப்புறம் தர்றேன்.'—என்று துணிந்து சொல்லி அனுப்புவார்கள் அவரும் தயங்காமல் அப்படியே வாங்கிவந்து கொடுப்பார்!

நல்லவேளையாக அவரது மனைவியும், அவருக்கேற்ற அன்புக் குணம் கொண்டவளாய் அமைந்திருந்தாள். இல்லாவிட்டால், மணிக்கு ஒரு சண்டையாவது மூண்டுகொண்டே இருந்திருக்கும்!

அவருக்கு மூன்று நான்கு குழந்தைகள் பிறந்தன. எல்லாம் இறந்துவிட்டு, ஒரு பையன் மட்டும் எஞ்சியிருந்தான். 15-16 வயது நிரம்பிய அவன், பெற்றோரின் அன்புக்குப் பாத்திரமானவனாய்ப் பள்ளியில் பயின்றுகொண்டிருந்தான்.

ஊரிலுள்ள—குறிப்பாக நாகூர் மீருவின் தெருவிலுள்ள, பள்ளிக்கூடம், மதரஸா ஆகியவற்றிற்குப் போகாத பிள்ளைகளையெல்லாம், அவர், காலையிலும் மாலையிலும் ஒன்று சேர்த்து, மதரஸாவுக்கும், பள்ளிக் கூடத்துக்கும் அழைத்துக் கொண்டுபோய் விடும் காரியம், பல குடும்பத்தினருக்குப் பெரும் கைங்கரியமாக இருந்தது!

இப்படியாக, எண்ணற்ற வகைகளில், எல்லாருக்கும் ஏற்றவராய், எல்லோர்க்கும் நல்லவராய் வாழ்ந்து வந்தார் நாகூர் மீரு!

அத்தகைய ஒழுக்க சீலரின்—குணக் குன்றின்—அன்பு உருவின் உடல்தான், உயிரற்றுக் கிடந்தது! இரக்கமே உருவான இதயம்தான் துடிப்பற்றுப்போயிருந்தது! ஏழையைக்கண்டு கலங்கிய கண்கள் தாம் மூடிக்கிடந்தன! வறியவர்க்கு வாரிவழங்கிய கரங்கள்தாம் வாடிக்கிடந்தன!

இத்தகைய நல்லவர்க்கே, மரணம் திடும் என்று வந்ததென்றால், மற்றவர் நிலைபற்றி என்ன கூறக் கூடும்?

# உதவிய, உதவும், உள்ளங்கள்!

எனது ஆருயிர் நண்பர்களாகிய ஜனாப் ஏ. எம். அசன் முகம்மது (கொல்லாபுரம்) ஜனாப் எஸ். ஏ. வஹாபு (அம்பகரத்தூர்) இருவர்களின் விடா முயற்சியால் கீழ் குறிப்பிட்டிருக்கும் நண்பர்கள் மூலம் எங்கள் (அம்பத்தூர், சென்னை-53) ஜமீயத்துல் முஸ்லிமீன் ஜமாஅத்தார்களின் பள்ளிவாசல் கட்டிட நிதிக்காக மனமுவந்து நன்கொடை கொடுத்து எங்களை ஊக்குவித்த அனைவருக்கும் (ஆண்டவன் நீண்ட ஆயுளும் குறையாத செல்வத்தையும் தந்தருள் வானாகவும், ஆமீன) எனது சார்பாகவும் ஜமாத்தார்கள் சார்பாகவும் மிகமிக நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்படிக்கு,

**K. P. தாஜுதீன்,**

செயலாளர்,

ஜமீயத்துல் முஸ்லிமீன், அம்பத்தூர், சென்னை-53.

---

1. எஸ். ஏ. கரீம்
2. ஏ. ஈ. மஸ்கத்திசூரத்
3. எஸ். ஏ. வஹாபு
4. ஏ. எம். அசன் முகம்மது
5. எம். ஜெக்கரியா
6. டி. அபுசாலி
7. எம். முஸ்தபா
8. பாக்கிஸ்தான்பஜார்வ
9. அஹமது தூது
10. பேகம் அன்யான்
11. எஸ் அப்துல் ஹக்கீம்
12. ஹபீப்ஸா
13. எஸ். எம். சுல்தான்
14. எம். சேருபிள்ளை
15. புனியாமின்
16. சோமாயி அஹமது-
17. எம். முகம்மது. ஜுபிதா
18. எம். அப்துல் ஹமீது
19. அப்துல் காசிம்
20. பேகம் ஜர்தான்
21. பேகம் சம்ஜான்
22. முகம்மது ஜமான்
23. எம். ஜமால் முகம்மது
24. எஸ். செய்யது கரீம்
25. சீசாவோ
26. முகம்மது கவுஸ்
27. ஹெச். முகம்மது தமீம்
28. எம். எம். யூசுப்
29. ஓ. எம். இப்ருஹீம்
30. எஸ். ஏ லத்தீப்
31. எம். எம். சுல்தான்
32. ஹமீது சுல்தான்
33. ஹாஜா அபூபக்கர்
34. ஏ. எம். இஸ்மாயில்
35. எம். எம். ஜெக்கரியா
36. நியாமத் கான்
37. ஆப்தாப்
38. முகம்மது ஜமான்
39. கரீம் மூஸா
40. எம். எம். ஹாலீது
41. சா. மொய்தீன்
42. எம். ஏ. ரசீது
43. ஹலீமா
44. ஏ. எம். ஓமர் ஹத்தா

மையித்தின் அருகே இருந்து சிலர், பலவகைப்பட்ட பேச்சுக்களையும் பேசிக் கொண்டிருந்த போது ஓதிக் கொண்டிருந்தவர்கள், யாஸீன் ஓதி முடித்தார்கள். யாஸீன் சூராவும், மற்ற குர் ஆன் சூராக்களும், யாராவது மவுத்தாகி விட்டால் அவர்களது தலைமாட்டில் வைத்து ஓதுவதற்கு உள்ளவை தாம் என்று எண்ணி இருந்தவர்களுக்கு, ஓதி முடித்த படலம், திருப்தியைத் தந்தது.

ஊதுவத்தி கனிந்து, குமைந்து சாம்பலாய் விட்டிருந்தது. அது கனிந்து சிதைந்து, மணத்தை எழுப்பி வைத்துவிட்டு, சாம்பலாய்ப் போய் விட்டிருந்த செயலானது, தன்னலமற்ற சமூகச் சேவையாளர், தம் உடல்பொருள் ஆவி அனைத்தையும், பிறருக்காக அர்ப்பணித்துவிட்டு, அமரத்துவம் எய்தும் அரிய காரியத்தை நினைவுறுத்தியது!

'மஹல்லா மௌலவி சாகிப், கபன் துணி கிழித்து ஒழுங்கு செய்ய வந்து சேர்ந்தார். ஜனங்க ளெள்ளாம், 'வாங்க அஜரத்— வாங்க அஜரத்' என்றுவரவேற்று 'மையித்தைக் குளிப்பாட்டலாமா?'- என்றும் அனுமதி கேட்டனர். 'நேரமாச்சே, குளிப்பாட்டுங்க. அதுக்குள்ளெ துணியைக் கிழிச்சுக்கிர்றேன். என்று கூறிவிட்டு, துணியை எடுத்துக் காரிய மாற்றலானார். 'அஜரத்'

"ஏங்க அஜரத் மௌத்து, இப்பவெல்லாம் திடீர் திடீர்ன்னு வர்ரதே, என்னங்க, அஜரத் காரணம்?"— என்று. அந்தச் சந்தர்ப்பத்திலேயேயும் ஒரு பெரியவர் விவரம் கேட்கலானார்.

மௌத்து வர்துக்கு நேரங்காலமா இருக்கு? உலகத்து ஜனங்களுக்கு உணர்ச்சி உண்டாகனுன்னுதான், அல்லாஹுத்

தாலாவானவன் எந்தெந்த வகையிலே எல்லாமோ, மௌத்துகளை உண்டாக்கிக் காட்டுன். அப்படி இருந்தும், ஜனங்கள் திருந்தி நடந்து, கடமையைச் செய்ய வர்ருங்களில்லையே''— என்று அங்கலாய்த்து, அரிய தொரு விளக்கமே கூறலானுர் அவர்:—

''ஒவ்வொரு ஆத்மாவும் மரணத்தைச் சுகித்தே தீரும்...'' என்று, குர்ஆன் 3:185 வசனம் சொல்கிறது.

''நாம்தாம் உங்களுக்கிடையில் (பல விதங்களில்) மரணத்தைக் கற்பிக்கிறோம்...''— என்று குர்ஆன் 56:60 ஆயத் கூறுகிறது.

''(எவனேனும் நோய்வாய்ப் பட்டு, அவனின்) உயிர்தொண்டையை அடைந்து விட்டால், (அவனுக்குச் சமீபத்தில் இருப்பவர்கள் அவனைச் சொஸ்தப் படுத்த) மந்திரிப்பவன் (வைத்தியன்)யார்? (எங்கே இருக்கிறுன்) என்று கேட்கிறுர்கள்...''— என்று 75:2'-29 ஆயத்துகள் சொல்கின்றன.

''உங்களில் எவருக்குப் மரணம் வருவதற்கு முன்பே நாம் உங்களுக்குக் கொடுத்துள்ளவைகளி

## திருமண வாழ்த்து!

விஜயபுரம் எனது மாமா மு. முஹம்மது ஜக்கரியா அவர்களின் மகளும் ஆரூர். எம். ஏ. ஜப்பார் பிரதர்ஸ் அவர்களின் தங்கையும் எனது மைத்துனியுமாகிய (தங்கப் பாப்பா என்ற) நஜ்முன்னிஸா பேகம் மணுளிக்கும் துளசியாப் பட்டணம் வீ. ஏ. அப்துல் ஜப்பார் அவர்களின் சகோதரர் வீ. ஏ. அமானுல்லா மணுளருக்கும் ஹிஜ்ரி 1386 ரஜப் பிறை 19, (2-11-66) புதன் மாலை, வியாழன் இரவு நடந்த திருமணத்துக்கு எனது நல் வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கிறேன். தம்பதிகள் பல்லாண்டுகள் வாழ்ந்து பலன் மிக்க பெறுக என வாழ்த்துகிறேன்.



**அ. மூ. அசன் முஹம்மது,**
கொல்லாபுரம். (தஞ்சை மாவட்டம்)
(Camp: கம்போடியா.)

விருந்து தானம் செய்யுங்கள்'' என்று, 63:10 ஆயத் விளக்கு கிறது.

இப்படிப்பட்ட அரிய உபதே சங்களையும், உண்மைகளையும் குர்ஆன் கூறிக்காட்டியும் கூட. உணர்ச்சி பெற்று கடமையைச் செய்கிறவர்களைப் பார்க்க முடி கிறதில்லே. இந்த நிலமையிலே, மௌத்து திடீர் திடீர்னு வராமெ, வேறெ எப்படி வரும்? நல்லவுங்களுக்கே இந்தக் கதி யின்னா. மத்தவுங்களுக்கு எந்தக் கதியோ?''

என்றெல்லாம் கூறி முடித்தார் மௌலவி சாஹிப். கேட்டுக் கொண்டிருந்த மக்கள், வாய் மூடி மௌனியர்களாய்ச் சமை ந்து போய் இருந்தனர்.

பிரேதம் குளிப்பாட்டப்பட் டது. கபன் தரிக்கப்பட்டு முன்பே தயாராகக் கொண்டுவரப்பட்டி ருந்த சந்தூக்கில் வைத்ததும் எடுத்துச் சென்றனர் மக்கள்.

இடையிடையே, மோதீனாரின் 'கலிமா ஷஹாதத்' என்ற ஒலி யும், அதைத் தொடர்ந்து மக்கள் எழுப்பிய மூன்றுங்கலிமா பிரதி பலிப்பும், நல்ல உள்ளங் கொண் டோரையெல்லாம் நெஞ்சு நடுங்கவைத்தன!

வீட்டில் வந்து கூடியிருந்த உற்றாரும் உறவினரும், ஜனாஸா வெளியில் போனதும், வீட்டு ஹாலவரைவந்து, வருத்தத் துடன் எட்டிப்பார்த்து நின்றனர்.

மவுத்தானவரின் மனைவியான வள். 'அல்லாவே...' என்று கத றியபடியே, வெளி வாசல்வரை தலைவிரி கோலமாக ஓடிவந்தாள். மற்ற பெண்கள், அவளை உள்ளே தள்ளிச் சென்று உட்கார வைத் தனர்.

மவுத்தானவரின் மகன் ஜனா ஸாவுடன் கப்ர் வரை சென்று, கப்ரில் ஒருபிடி மண்ணை அள்ளிப் போட்டு, கப்ரின்மேல் மலர் தூவி, கண்கசியக் கலங்கி நின்று, தன் வருத்தத்தையெல்லாம் தெரிவித் தான்!

இப்படியாக, ஒவ்வொருவரும் தத்தமக்கு முடிந்த அளவுக்குத் தமது வருத்தத்தைத் தெரிவித் துக் கொண்டனர்.

ஆனால்...?

''வீடுவரை உறவினரும், வீதி வரை மனைவியும், கப்ருவரை மகனும் பிரேதத்துடன் வந்து சென்றனர்.

கடைசிவரை, பிரேதத்துடன் சென்று, அவருக்குச்சுபசோபன வாழ்வினை வாங்கித் தருவது யார்?''

—அடக்கம் செய்து விட்டுத் திரும்பிய போது, இப்படி ஒரு ரகசியப் புதிரைத் தூக்கிப் போட் டார் ஒருவர்! அவர்கேட்டபாட்டு ஒன்று நினைவுக்கு வந்தது போலும்!

'மவுத்தானவர் செய்த நல்ல அமல்கள்-நற்செயல்கள் தான்!'' —என்றபடி. கூட்டத்திலிருந்து ஒரு குரல் கம்பீரமாகத் தொனித் தது! கூட்டத்தினர். குரல் வந்த திக்கை நோக்கினர்:

நாகூர் மீருவுடன், ஒன்றிப் பழகி-அவரைப் போலவே நல்ல வராய் வாழ்ந்த ஒரு பெரியவர் தான் அப்படிச் சொல்லிவிட்டு அமைதியாக நடந்து கொண்டி ருந்தார்.

அவருடைய விளக்க உரை, மக்களுக்கு ரகசியப் புதிராகத் தெரிந்த விஷயத்தை, உடைத்து நொறுக்கி, அவரவர் வீடுதிரும்பும் வரையிலாவது சிந்திக்கச் செய் தது!

# பழமொழி

594. ஒரு பாவத்தைப் பலர் செய்தாலும் அது பாவமே.
—ஹங்கேரி.

595. எங்கே உழவன் ஏழையாக இருக்கிருனே, அந்த நாடு முழுமையும் ஏழையாக இருக்கிறது.
—போலந்து.

596. பேசுவது தங்கம், கொடுப்பது செம்பு.
—இங்கிலாந்து.

597. பெருமையை விட்டொழி என்று சொல்கிறது மயில்.
—அயர்லாந்து.

598. பணத்திற்காக மணம் செய்யாதே, அதை இன்னும் மலிவாகக் கடன் வாங்கலாம்.
—ஸ்காட்லாந்து.

599. இதயத்தில் இருக்கும் நெருப்பு தலையில புகையை உண்டாக்குகிறது.
—ஜெர்மனி.

600. தங்கப்படுக்கையினுல் நோயாளிக்கு என்ன பிரயோஜனம்?
—ஹங்கேரி.

601. கடவுளை ஏமாற்ற நினைக்கிறவன் ஏற்கனவே தன்னை ஏமாற்றிவிட்டான்.
—இத்தாலி.

602. சமையல்காரன் ஒரு ஈயைச் சமைத்தாலும்கூட அவன் தனக்காக ஒரு சிறகை எடுத்து வைத்துக் கொள்வான்.
—போலாந்து.

603. விருந்தாளியும் மீனும் மூன்று நாட்களில் துர்நாற்றம் வீசுகின்றன.
—போர்ச்சுகல்.

604. பணக்காரர்களிடம் பணம் இருக்கிறது. ஏழைகளிடம் மன அமைதி இருக்கிறது.
—எஸ்த்தோனியா.

605. பிரிவது கொஞ்சம் சாவது (போல)
—பிரான்ஸ்.

606. சிரிப்பு நல்ல இரத்தத்தை உண்டாக்குகிறது.
—இத்தாலி.

# ஆயிரம்

607. மனச்சாட்சி ஆயிரம் சாட்சிகளுக்குச் சமம்.
—இத்தாலி.

608. நோயின் தந்தை யாரோ, தவறான உணவுதான் அதன் தாய். —இங்கிலாந்து.

609. பழமொழிகள் அனுபவத்தின் குழந்தைகள்.
—இங்கிலாந்து.

610. பெண் ஒருத்தி இல்லாமல் ஒரு போதும் ஒரு சண்டை உண்டானதில்லை. —அல்பேனியா.

611. கோபக்காரனிடமிருந்து கொஞ்சம் விலகி இரு; மௌனமாக இருப்பவனிடமிருந்து என்றுமே விலகி இரு. —இங்கிலாந்து

612. சமாதானம் விலைகொடுத்து வாங்கத் தகுந்தது.
—அயர்லாந்து.

613. குழந்தைகள் இளமையாக இருக்கும்போது பெற்றோர்களுக்குத் தலைவலி; அவர்கள் வயதான போது பெற்றோர்களுக்கு இதய வலி.
—ஸ்காட்லாந்து.

614. செல்வத்தை விட ஒரு தொழில் மேலானது.
—வேல்ஸ்.

615. பாவத்தில் வாழ்கிறவன் உயிரோடு புதைக்கப் படுவான். —பல்கேரியா.

616. எளிதில் நம்புகிறவன் எளிதில் ஏமாற்றப்படுவான்
—ஸெக்கோஸ்லோவேகியா.

617. உன் மக்கள் பிச்சை எடுக்காமலிருப்பதற்கு நீ பிச்சை கொடு. —டென்மார்க்.

618. முதலில் முட்டையிடு, பின்னர் கொக்கரி.
—எஸ்த்தோனியா.

*(தேர்ந்த தமிழாக்கியவர்: எஸ் ஏ. சுலைமான், M. A.)*

# தமிழகத்துக்கே ஒரு இழப்பு

★

பனைக்குளம்

**மு. அப்துல் மஜீது**

★

அண்மையில் காலஞ் சென்ற "முஸ்லிம் முரசு" ஆசிரியர் அப்துர் ரஹீம் சாஹிப் அவர்கட்கும் எனக்கும் நல்ல நட்பு இருந்து வந்தது. என்னை அவர்களோடு நட்புக் கொள்ள வழிவகுத்துவைத்தவர்கள் எமது உழுவலன்பர் கீழக்கரை பெருந்தகை எம். என். எம். யூசுபு அவர்களே! பெரிய மனிதர்களிலும் நல்ல மனிதர்களைத் தேடி அவர்களோடு நட்புக் கொள்வதில் பெரிதும் விருப்பம் கொண்டவர்களான ஜனாப் எம். என். எம். யூசுபு அவர்கள் உண்டாக்கி வைத்த எங்கள் நட்பு "புணர்ச்சி–பழகுதல்–வேண்டா–உணர்ச்சிதானட்பாங்–கிழமை–தரும்" என்னும் வள்ளுவர் வாக்கின்படி அவர் இறுதிநாள்வரை உணர்ச்சி நட்பாகவே இருந்து வந்தது இன்று நிலவுலகில் மறைந்துவிட்டது. புணர்ச்சி நட்பினும் உணர்ச்சி நட்பே சாலது என்று கூறும் பெரியார் சொற்படி எங்கள் நட்பு முடிவு பெற்றது.

ஆசிரியர் அப்துர் ரஹீம் சாஹிப் அவர்கள் சென்ற 19 ஆண்டுகளாக அளப்பரிய பணிபுரிந்திருக்கிறதைத் தமிழ் நாடு நன்கு அறியும். அவர்கள் புரிந்துள்ள திருப்பணியைச் சமுதாயத்தோடுமட்டும் வைத்துப் பேசிவிட முடியாது. அரசியல், மொழி, உலகியல் ஆகிய துறைகள் எல்லாவற்றிலுமே வைத்துப் பேசல் வேண்டும்.

தமிழ்ப் பெரும் நாட்டிலே தமிழ் முதலிடம் பெற வேண்டும். அதிலும் தமிழகத்திலுள்ள எல்லா இன மக்களும் இனிய தூய தமிழை எழுதவும் பேசவும் முன்வரல் வேண்டும். என்று பேரார்வம் கொண்டு பெருந்தொண்டு செய்தார்கள். அவர்கள் எழுதிவந்த தலையங்கம் அவர்களுக்கே உரியதான அலாதி இயலுடையதாய் இருந்தன. நல்ல பொருட் செறிவும் இனிய சொல்வளமும் பீடு நடைபெற்றனவாயும் இலங்கி வந்தன.

உலகத்தில் உயர்வு பெற்ற நவமணிகள் பல பகுதிகளிலும் புதைந்து கிடப்பனவற்றை ஆராய்ச்சியாளர் கண்டெடுக்

கின்றனர், எனினும் அவைகள் சாணையிலேறித் தேய்வு பெற்ற பின்னரே அவற்றின் உயர்வினை மக்களால் மதிப்பிடக்காண்கிறோம். இவ்வாறே தமிழகத்திலுள்ள கவிஞர் எழுத்தாளர் ஆகியவர்களைத் தமது முரசுச் சாணையிலேற்றி உலகப் புகழுக்கு இலக்காக்கிவைத்துள்ளார் அப்துர் ரஹீம் சாஹிப்.

சமூக நலனுக்காக இஸ்லாத்தின் உன்னதவழிகளை, திருக் குர்ஆன், ஹதீஸ் ஆகியவைகளின் ஆதாரங்களோடு எல்லா இனமக்களின் இதயங்களிலும் இடம்பெறும் வண்ணம் உண்மையினையும், உயர்வினையும் எடுத்துக்காட்டி வந்தது அவர்கள் வெட்டிவிட்டப் புது வாய்க்காலாகும்.

தமிழகத்திலே ஹிந்து பெருமக்களும் முஸ்லிம் முரசைப் படிக்கவும் பாராட்டவும் அவர்கள் செய்து வந்த சாதனை மறக்க முடியாத தொன்றாகும். இன்னும் எவருடைய சொல்லேயாயினும் அது மனித இனத்திற்கு உகந்ததாய் இருப்பின் அவைகளுக்குத் தமது முரசில் இடமளித்து வந்தது அவர்கள் நடு நிலைமைக்குரிய கட்டலைக்கல்லாய் இருந்தது. இன்னும் அவர்களின் நற்குணபாவங்களை எவ்வளவோ கூறிக்கொண்டு போகலாம்.

என்னே இந்த உலகம்! நாம் படித்தபடி, கேட்டபடி, அனுபவித்தபடி எல்லாம் அநித்யமே! அவர்கள் இந்த அநித்ய உலகத்தைவிட்டு நித்ய உலகத்திற்குப் பயணம் போய்விட்டார்கள் என்ன செய்வோம். எல்லாருக்கும்தான் அந்த வழி திறந்து வைக்கப்பட்டிருக்கிறது. அல்லாஹ் ஒருவன்தான் என்றும் அழிவில்லாதவன். எல்லா செயலும் அவனுடைய செயலே. இவ்வாறு தம் குடும்பத்தார்களையும் சுற்றத்தார்களையும் நண்பர்களையும் அவலத்தில் ஆழச்செய்து விட்டுக் கண்டவர்கள் கேட்டவர்கள் எல்லாரும் இன்னாலில்லாஹிவ இன்னா இலைஹி ராஜிஊன் என்று உச்சரிக்கும் வண்ணம் மறைந்து விட்ட அவர்கள் ஆத்மா நற்சாந்திபெற வல்ல இறைவன் அருள்புரிவானாக. அவர்கள் குடும்பத்தார் சுற்றத்தார் ஆகியவர்கள்பால் எனது ஆழ்ந்த அனுதாபம் உண்டாவதாக.




## 8. மாயமாய் வந்த வீரன்!

கோட்டையின் ஒரு மருங்கில் இருந்த சன்னல் வழியாக களத்திலே நடந்து கொண்டிருந்த போரைக் கவனித்துக் கொண்டிருந்தார் ஒரு முஸ்லிம் வீரர் மிகைத்து நின்ற பகைவர்களை எதிர்த்துத் தம்முடைய இஸ்லாமிய சோதரர்கள் தீரமுடன் போராடிய காட்சிகள் அவருடைய உள்ளத்தில் உணர்ச்சி அலைகளை எழுப்பிய வண்ணமிருந்தன. அவர்களில் தாமும் ஒருவராகக் களம் நின்று சமர் செய்ய வேண்டுமென அவர் பெரிதும் விரும்பினர். அதற்கான உடல் வலிமை அவருக்கு இருந்தது. நெஞ்சுறுதியுமிருந்தது. ஆனல் அவர் கோட்டையிலிருந்து வெளியேறிச் செல்லத் தான் வழியில்லை!

களத்திலே குதிக்காமல், அங்கு நடப்பவற்றைக் கோட்டைக்குள்ளிருந்து கொண்டு தமது கண்களால் மட்டும் பார்த்திருக்கத்தான அவர் கதிஸிய்யாவிற்கு ஓடோடி வந்தார்? 'அதுவும் எவ்வாறு?'— அவரது சிந்தனை பின்னேக்கி ஓடியது...

கலீபா உமரின் கட்டளை நாடெங்கும் பறந்த நிலையில், பாரசிகம் செல்ல போர் வீரர்களும் மற்றவர்களும் மதீனவில் குவிந்து கொண்டிருந்த நேரம் அதைப்பற்றித் தெரிந்த போது தாமும் இஸ்லாமியச் சேனையில் இடம்பெற வேண்டும் என மிகவும் விழைந்தார் அவர். ஆனல் ஏதோ உணர்ச்சி வேகத்தில் மறையுரை ஒன்றிற்கு மாருக நடந்துகொண்ட காரணத்தினல் அவர் சிறையில் வைக்கப்பட்டார். எப்படியும் களம் செல்ல வேண்டும், சத்தியப் போரில் கலந்துகொள்ள வேண்டுமென்ற ஆவலால் உந்தப்பட்ட அவர் எவ்வாறே சிறையிலிருந்து தப்பினர். அதற்குள் இஸ்லாமியச் சேனையானது மதீனவிலிருந்து புறப்பட்டுச் சென்றுவிட்டது. ஆயினும் அச் சேனையுடன் சேர்ந்துகொள்ள கதிஸிய்யாவை நோக்கி விரைந்தார். களத்திலே

தாம் கொள்ளப் போகும் பங்கைப்பற்றி என்னவெல்லாமோ ஆசை நினைவுகளுடன் வந்தார். ஆனால் வந்தஇடத்தில்அவருக்கு ஏமாற்றம் தான் காத்திருந்தது. மதீனாவிலிருந்து அவர் தப்பிச் சென்றதையறிந்த கலீபா, அது பற்றி கதிஸிய்யாவிலிருந்த ஸஅதுக்கு எழுதினார். கலீபாவின் கட்டளைப்படி தளபதியார் அவரை மீண்டும் சிறைப்படுத்தினார்.

இப்போது...?

'சிறைக் கம்பிகளினூடேதான் நாம் போரின்போக்கைக் கவனித்திருக்க வேண்டுமா? என்ன துரதிர்ஷ்டம்!'—

சிறைக் கைதியின் உள்ளம் வெதும்பியது.

திடீரென, பாரசீகர்களின்அணிகளிடையே பொங்கியெழுந்த உற்சாக ஆரவாரம் அவர் கவனத்தைக் கவர்ந்தது. அவர் கண்களின் எதிரே, அழுத்தமாக முன்னேறிய பகைவர்களால் முஸ்லிம் வீரர்கள் பின்தள்ளப் பட்டு வந்தனர். அதைக்கண்டு அவருடைய உடம்பில் ஓடிய குருதி கொதித்தது. களத்திலே வாட்களும் கேடயங்களும ஒன்றோடொன்று மோதிய ஒலியின் வேகம் அவர் உள்ளத்துறைந்த வீர உணர்ச்சியை விசையாகச் சுண்டிவிட்டது. அப்போதே, அந்த வினாடியே வெஞ்சமரில் குதித்து எதிரிகளை நெஞ்சாரச் சாடவேண்டுமென அவர் தவியாகத் தவித்தார். கரங்களை முறுக்கிப் பிசைந்தார்.

'களத்தில் காணும் எதிரிகளை என்ன செய்வேன், தெரியுமா?'-

ஆவேசத்தில் இழுத்த அவர் கால்களில் வேதனை சுண்டியது. அவற்றை விலங்கல்லவோ பிணைத்திருந்தது?

அந்நேரம் அடர்த்தியாகப் பாய்ந்து வந்த பகைவர்களின் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் முஸ்லிம்கள் தத்தளித்ததைக்கண்ட அந்த சிறைக் கைதிக்குத் தான் உடனடியாக களம் செல்லவழிகாணாத பட்சத்தில் பயித்தியமே பிடித்து விடும் போலிருந்தது. அந்த அளவு பாரசீகர்கள் மேல் அவருள்ளத்தில் ஆத்திரம் கொப்புளித்துக் குமுறியது.

அங்கே விடுதியின் மாடியிலிருந்த ஸஅதும் களத்திலே மும்முரமாக நடந்து கொண்டிருந்த போராட்டத்தைக் கவனமுடன் பார்த்திருந்தார். முன்னேறி வந்த பாரசீகர்களைத் தடுத்து நிறுத்தி, தொலைவிலே நின்று கொண்டிருந்த எதிரிப்படைகளை எவ்வாறு ஊடுருவிப் பிளந்து சிதைப்பதென்றும், முஸ்லிம்களுக்கு ஏற்பட்டு வந்த தோல்விகளுக்கு எவ்விதம் ஈடுசெய்வதென்றும் அவர் மனம் சதா சிந்தித்த வண்ணம் இருந்தது.

பொழுது சாயத் துவங்கிவிட்டது. அப்போது...

போர் அரங்கைச்சூழ நோட்டமிட்டுக் கொண்டிருந்த ஸஅதின் பார்வையில் வீரன் ஒருவன், பாரசீகர்களுடன் மல்லாடிக்கொண்டிருந்த முஸ்லிம்களை நோக்கி அதிவேகமுடன் விரைந்து செல்வது தென்பட்டது. சினமுற்ற சிங்கம் போலக் களத்திலே குதித்த அவ் வீரனின் துணிவுதான் என்ன! அங்கு மிங்கும் எப்படிச் சுற்றிச் சுழன்று வந்தான்? மின்னலைப் போல அல்லவா அவன் எதிரி அணிகளை ஊடுருவிப் பாய்ந்து பிளந்து சென்றான்! நாலுதிசைகளிலும் துரிதகதியில் பாய்ந்து சென்ற அவனுடைய வாள் வீச்சிலே

எத்தனையெத்தனை பகைவர்கள் பட்டு வீழ்ந்தனர்! அவ்வாறு பல நம்ப முடியாத வீரதீரச் செயல்களைச் செய்து கொண்டிருந்த அவ்வீரன்...

'அவன் யார்?'—

இன்னும் கவனமுடன் அவனை ஆழ்ந்து நோக்கினார் ஸஅத். என்ன! அவ் வீரன் ஏறியிருந்த குதிரை...

'நம்முடைய வெண்புரவியைப் போல அல்லவா இருக்கிறது? அப்படியானால், அவ் வீரன்... அவரைப்போல இல்லை?...ஹும் அவராக இராது! அங்கே அவர் சிறைக்குள் அடைப்பட்டிருக்கும் போது...?'

அத்துடன் ஸஅதின் சிந்தனையோட்டம் நின்றுவிடவில்லை. வேறுவிதமாக அவருக்கு எண்ணமோடியது—

சுற்று முற்றும் அவர் சாயல்... ஆம், அவராகத் தானிருக்க வேண்டும்!''

அவ்வெண்ணத்தை அவர் உறுதிப்படுத்துமுன், கண்டவர் வியப்புறும் வண்ணம் களத்தில் பல சாகசச் செயல்களைப் புரிந்த அவ் வீரன், அங்கு வந்ததைப் போலவே திடீரென அதை விட்டுச் சென்று விரைவிலே மறைந்தான். அதற்குள் அந்தியும் மங்கிவிட்டது.

என்ற போதிலும், போர் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. தன்னந்தனியாக எதிரிகளைச் சாடிச்சென்ற வீரனின் வீரமும் தீரமும் மற்ற முஸ்லிம் படை வீரர்களை புதிதானதோர் சக்தி கொள்ளச் செய்தது.

இரவின் இருளினூடே கைங்களிரண்டிலும் வாட்கள் ஏந்திய

வராகப் பகைவர்களின் அணி களிடையே பாய்ந்து சென்ருர் துலேஹா. எதிரிகள் பலரை வெட்டி வீழ்த்தியதுடன் அல்லாமல், அவர்களில் ஒருவனைச் சிறைசெய்தும் வந்தார்.

மெல்லமெல்ல, முஸ்லிம்களுக்குப் போரிலே சாதகம் ஏற்பட்டு வந்தது. அவர்களின் வாள், வேல் வீச்சிலே பஹ்மன், இளவரசன் பரஸ் போன்ற பல பாரசீகத் தளபதிகளும் படைத் தலைவர்களும் வீழ்ந்து பட்டனர்.

நாளெல்லாம், இரவெல்லாம் படை இயக்கிக் களைத்துப்போன தளபதி ஸஅத் மெத்த அலுப்புடன் தமது சாகை திரும்பிய போது நடு நிசி அண்மிவிட்டது அவருடலும் உள்ளமும் ஓய்வை விரும்பிய நிலையிலும் அன்று மாலை மாயமாக வந்து மறைந்த வீரனின் விந்தைச் செயல்கள் அவருள்ளத்தில் உணர்வலைகளைக் கிளப்பியவாறு இருந்தன. போரின் குழப்பத்திலும், சந்தடியிலும் அவற்றை அவர் மறந்து போய் விடவில்லை.

ஊழியர் ஒருவரை அனுப்பி மதீனுவிலிருந்து தப்பிவந்த சிறைக் கைதியைப் பற்றி விசாரித்துவரச் செய்தார் ஸஅத். என்ன ஆச்சரியம்! கைதியான வர் விலங்கு பூட்டப் பட்டவராக சிறையில் பத்திரமாக இருப்பதாகத் தெரியவந்தார்.

தளபதியாருடைய வியப்பு இன்னும் அதிகமாகியது. அவ் வியப்பிலே தம் மனதை ஆழ விட்டிருந்த அவரிடம் அவரது மனைவியார் ஸல்மா வந்தார்—

"இன்னும் தூங்கவில்லையா? உங்கள் உடம்புக்கு ஆகாதே!" எனப்பரிவுடன் கூறினர்.

"ஸல்மா! இன்று மாலை களத்திலே நடந்த சம்பவமொன்றை உன்னிடம் சொல்லாதவரையில் எனக்கு எங்கே தூக்கம் வரப் போகிறது?" என்றவராகத் தம்முடைய மனைவியாரிடம் எல்லாவற்றையும் விபரமாகக் கூறினார்.

"களம் வந்த வீரன் முற்றிலும் அபூ மிஹ்ஜானைப் போலத்தானிருந்தான். கொஞ்சம்கூட மாற்றமில்லை. ஆனால்...இங்கு வந்து விசாரித்தாலோ, அவர் சிறையில் பத்திரமாக இருக்கிறார். இது விந்தையாக இல்லை? என் கண்கள் என்னை ஏமாற்றிவிட்டனவா?"

"கண்ணால் காண்பது பொய்யாகவும் இருக்கலாம், மெய்யாகவும் இருக்கலாம். பொழுது விடிந்தால், எல்லாம் புலனாகி விடலாம்! இப்போது நீங்கள் தூங்கச் செல்லுங்கள்" என்று வாஞ்சை நிரம்பக் கூறினார், ஸல்மா. அதை மறுதளிக்க முடியாத ஸஅத், படுக்கையில் படுக்க அவர்மீது போர்வையை நன்றாக இழுத்துவிட்டு அப்பால் சென்றார் அவருடைய அன்பு மனைவியார்.

வைகறைத் தொழுகைக்குப் பின், அன்றைய அலுவல்களைக் கவனிக்கச் சித்தமாகிக் கொண்டிருந்த ஸஅதிடம் ஸல்மா வந்தார்:

"நேற்று மாலை நீங்கள் கண்ட அந்த மர்ம மனிதர் அபூ மிஹ்ஜானே தான்!" — சிரித்துக் கொண்டே கூறினார்.

"என்ன, அபூ மிஹ்ஜானா? என்னால் நம்ப முடியவில்லையே! ஆமாம், அது அபூ மிஹ்ஜான் தான் என உமக்கு எவ்வாறு தெரியும்?"—வியப்புமிக்கவராக வினவினார் ஸஅத்.

"எல்லாம் விபரமாகச் சொல்கிறேன்" என ஸல்மா கூறத் துவங்கினார்...

முன் தினம் அபூ மிஹ்ஜான் விலங்கிடப் பட்டுக்கிடந்த சிறைப்பக்கமாக ஸல்மா போக நேர்ந்தது.

''நல்ல பெண்மணியரே! ஆண்டவனுக்காக, என்னைப் பிணைத்




திருக்கும் விலங்கினை சற்றே நீக்குங்கள். களம் சென்று போராட என் மனம் துடிக்கிறது''-வேண்டுதல் நிரம்பிய குரல் சிறையிலிருந்து வெளிப்பட்டது.

அவ் வேண்டுதலை ஏற்கத் தயங்கினார் ஸல்மா. மவுனமாக அப்பால் செல்ல முனைந்தார்.

''என் மீது தயை கூருங்கள்! சத்தியப்போரில் கலந்துகொள்ள எத்துணை ஆர்வத்துடன் ஓடிவந்தேன்! என் துரதிர்ஷ்டம், சிறையில் தள்ளப் பட்டேன். உங்களை மீண்டும் கேட்டுக்கொள்கிறேன்: என்னை விடுவியுங்களேன்!''–அபூ மிஹ்ஜானின் குரல் மேலும் குழைந்தது.

''நீர் சொல்வது சரிதான்! ஆனால் குற்றவாளியான உம்மை எவ்வாறு நான் விடுவிப்பது? தளபதியார் அவர்களுக்குத்தெரிந்தால், என் பாடு சங்கடமாகி விடுமே!''—

அபூ மிஹ்ஜானின் கோரிக்கையை நிறை வேற்றுவதற்கு ஸல்மா முன் வருவதாக இல்லை. அங்கு மேலும் நிற்க விரும்பாமல் அப்பால் நடக்கலுற்றார்.

''ஏன் பேசாமல் செல்கிறீர்கள்? என் மீது உங்களுக்கு மனமிளகவில்லையா?' என ஆழ்ந்த பணிவிலே வார்த்தைகளைத் தோய்த்தெடுத்துக் கூறினார் அபூ மிஹ்ஜான்.

ஸல்மாவின் கால்கள் அதற்கு மேல் முன் செல்லாமல் தயங்கி நின்றன. அப்போது தம்முடைய உள்ளத்தின் சோகத்தை எல்லாம் கவிதையாக வடித்துப் பொழிந்தார் அபூ மிஹ்ஜான்—

''என்னுடைய வருத்தம் உலகில் மற்றெவருடையதைக் காட்டிலும் கொடிது. கரங்களில் வாட்களேந்தி, புரவிமீதேறிய மனிதர் அங்கே தீரமுடன் சண்டையிட்டுக் கொண்டிருக்கின்றனர் ஆனால் நானோ...! கால் விலங்கன்றோ என் சுதந்திரத்

தைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கின்றன" என்ன செய்வேன்? சிறைக்கதவுகள் எல்லாம் தாளிடப்பட்டிருக்கின்றன. என்னுடைய வேண்டுதலுக்குச் செவிமடுக்க எவருமில்லையா? களம் சென்று. நான் உயிருடம் இருப்பேனேயாகில் மாலை மயங்கும் போது மீண்டும் இங்கு வந்து விடுவேன். மெத்த மகிழ்வுடன் மறுபடியும் விலங்கினைப் பூட்டிக் கொள்வேன்...''

வீரம் ததும்பும் கவிதைகள், வேண்டுதல் மிக்க பாடல்கள் அடுத்தடுத்து அருவி நீர் போல அபூ மிஹ்ஜானிடமிருந்து வெளிப்பட்டன. அவற்றால் தம்முடைய உள்ளத்தில் ஓடிய உணர்வுப் பெருக்கைச் சமாளிக்க முடியவில்லை. ஸல்மாவுக்கு. சிறைக் கதவைத்திறந்தார் அறையினுள் வந்து. அபூ மிஹ்ஜனைப் பிணைத்திருந்த விலங்கினைக் கழற்றி விட்டார்.

அப்போது நன்றி கூறும் விழிகளால் ஸல்மாவை நோக்கி அபூ மிஹ்ஜான் உறுதியளித்தார்.

''என்னை நம்புங்கள்! என் ஆசைதீர களத்திலே பகைவர்களைச் சாடிவிட்டு, இங்கு திரும்பி விடுவேன்.''

அதற்கு மேல் ஒரு விநாடிகூட அங்கு நிற்காமல் திறந்திருந்த சிறைவாயில் வழியாக வெளியே ஓடினார்...

''அவர் நாடறிந்த கவிஞர் மட்டுமல்லர். நாணயமிக்கமனிதரும் கூட என்பதைக் காட்டி விட்டார்'' என்று கூறி முடித்தார் ஸல்மா.

அதைக்கேட்டு உள்ளம்பூரித்தவராக ஸஅத் சொன்னார்.

''இவ்வளவு சுத்தவீரரா அவர்? இதுவரை எனக்குத் தெரியாமல் போய்விட்டதே!''

பிறகு மெல்ல நடந்து சென்று சிறையை அடைந்தார்.

தளபதியார் திடீரென வந்ததைக் கண்ணுற்ற அபூ மிஹ்ஜானுக்கு ஒரு கணம் ஒன்றுமே ஓடவில்லை. 'நேற்று நாம் சிறையிலிருந்து வெளியேறிய செய்தி தெரிந்துதான் தளபதியார் இங்கு வந்திருக்க வேண்டும். அதற்கு மேலும் தண்டனை கிடைக்குமோ? கிடைத்தாலும், அதை மெத்த மகிழ்வுடன் ஏற்றுக் கொள்வோம்' என்ற மனத்துடன் பேசாது நின்றார்.

அவரை வியப்பில் ஆழ்த்தி விட்டது ஸஅதின் பேச்சு—

''நேற்று நீர் பகைவர்மீது நடத்திய சாகசச் செயல்களை நான் கண்ணாரக் கண்டேன். மேலும், உம்முடைய விஷயமெல்லாம் நன்கு அறிந்து கொண்டேன். அல்லாஹ்வின் மீது ஆணையாக! முஸ்லிம்களை மிகவும் நேசிக்கும் ஒருவரை நான் இனிமேலும் சிறையில் வைத்திருக்கப் போவதில்லை. உம்மை விடுதலை செய்கிறேன். நீர் மற்றவர்களைப் போல சுதந்திரமாகக் களம் வரலாம். உம்மைப் பற்றி கலீபா அவர்களுக்கும் எழுதுவேன்.'

''ஆண்டவன் மீது சத்தியமாகச் சொல்கிறேன்: இனியொரு போதும் நான் மதுவை விரும்பேன்''—உணர்ச்சி மீறூறக் கூறினார் அபூ மிஹ்ஜான், நீர பனித்த கண்களுடன் தளபதியார் ஸஅதைப் பார்த்து நின்றார். ★

(தொடரும்)

---

## சந்தாதார்கள் கவனத்திற்கு!

சந்தாத்தொகை அனுப்பும் பொழுதும் கடிதம் எழுதும் பொழுதும் தங்கள் சந்தா எண்ணைக் குறிப்பிடுக.

நிருவாகி, 'முஸ்லிம் முரசு'

---

சென்ற இதழின் தொடர்

# மதியும் மயக்கமும்!

மூலம்:

இமாம் கஸ்ஸாலியின் "இஹ்யா"

தமிழாக்கம்:

மௌலவி எஸ். அப்துல் வஹ்ஹாப் (பாக்கவி)



இப்போது உங்கள் சிந்தனையை இம்மைக்குத் திருப்புங்கள். அது உங்கள் கையிலிருக்கும்ரொக்கம் என்பதையோ அதுகவர்ச்சி மிக்க இன்பம் என்பதையோ நாம் மறுக்கவில்லை. ஆனால் தயவு செய்து அந்த இம்மையை மறுமையுடன் ஒத்துப் பாருங்கள். உலகில் எத்தனைகோடி இன்பங்கள் இருந்தாலும் இருக்கட்டும். அவற்றின் சக்திக்கு எத்தனைகோடி மானிடர் பலியானாலும் ஆகட்டும். ஆனால் அந்த இன்பங்கள் அனைத்தும் விரைவில் அழியக் கூடியவை என்பதை நம்மால் எப்படி மறுக்க முடியும்?

மறுமை வாழ்வு நிலையானது. மறுமையின்பத்தைப் பத்து லட்சம் பாகங்களாகப் பிரித்து அவற்றில் ஒரு பாகத்தை எடுத்து வைத்துச் சிந்தனை செய்து பாருங்கள். அந்த ஒரே ஒரு பாகத்தில் நூற்றில் ஒரு பகுதிக்குக்கூட இம்மையை ஒப்பிட முடியாது. ஏனெனில் இம்மையின் வாழ்வெல்லாம் உங்களைப் பொறுத்தமட்டில் வெறும் நூறு ஆண்டுகளே. அதற்குப் பின்னர் நீங்களும் இங்கு இருக்க மாட்டீர்கள்; நானும் இங்கு இருக்க முடியாது.

இப்போது சொல்லுங்கள். இம்மை எனும் ஒன்றை மறுமை எனும் லட்சத்துக்காகத் தியாகம் செய்வது புத்திசாலித்தனமல்லவா? லட்சத்தைப் பொருட்படுத்தாமல் ஒன்றே ஒன்றைக் கட்டிக்கொண்டு மாரடிப்பது அறிவுடைமையாகுமா?

உலக இன்பம் எல்லைகட்ட முடியாத பல துன்பங்களை இழுத்து வருகிறது. ஆனால் மறுமையின் இன்பத்தில் இந்தக் கோளாறு கிடையாது. ஒப்புவமையற்ற அந்த இன்பத்துக்கு துன்பத்தின் துணை தேவையில்லை.

இம்மை நிச்சயமானது என்றும் மறுமை சந்தேகத்திற்கிடமானது என்றும் அவர்கள் வாதிக்கிறார்கள். நிச்சயமானதை விட்டு விட்டுச் சந்தேகத்திற்கிடமானதைத் தேடியலைவது அறிவுடைமையல்ல என்பது அவர்கள் கருத்து. இந்தக் கருத்து எவ்வளவு தவறானது என்பதை அவர்கள் வியாபாரிகளைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்.

வியாபாரிகள் பெருத்த மூலதனத்தைப் போட்டு வர்த்தகம் செய்கிறார்கள். கையிலிருக்கும் ரொக்கமும் கடையில் குவிந்து

கிடைக்கும் சரக்குகளும் நிச்சயமானவை என்று அவர்களுக்குத் தெரியும். தம் வியாபாரத்தில் தாம் எதிர்பார்க்கும் லாபம் சந்தேகத்திற்கிடமானது என்றும் அவர்கள் தெரிந்திருக்கிறார்கள். ஆரம்பிக்கப்படும் வியாபாரங்கள் அனைத்தும் வெற்றியடைந்து விடுவதில்லை என்றும் எதிர்பார்க்கப்பட்ட நிலை ஏற்படாததால் எத்தனையோ வர்த்தக நிலையங்கள் மூடப்பட்டிருக்கின்றன என்றும் அவர்களுக்கு நன்றாகத் தெரியும்.

இருந்தும் அவர்கள் தம் வழியிலேயே சென்று கொண்டிருக்கிறார்கள் கையிலுள்ள நிச்சயப் பொருளைத் தியாகம் செய்து சந்தேகத்திற்கிடமான லாபத்தை அவர்கள் எதிர்பார்க்கத்தான் செய்கிறார்கள். ஏனெனில் எதிர்பார்க்கப்படும் சந்தேகப் பொருள் கையிலிருக்கும் நிச்சயப் பொருளைவிட அதிகமானது.

வியாபாரிகளைக் கேட்டால் என்ன சொல்வார்கள் தெரியுமா? வேறு என்ன சொல்லப் போகிறார்கள்? தாம் செல்லும் வழியே சிறந்தது என்றும் சந்தேகமானதை நம்பி நிச்சயமானதைவிடக் கூடாது என்பது மதிமயக்கம் கொண்டவர்களின் பேச்சு என்றும் ஆணித்தரமாகக் கூறுவார்கள். இதோ அவர்கள் கூறுகிறார்கள்: "நான் அவசியம் வர்த்தகம் செய்ய வேண்டும். இல்லையேல் நான் பெரிதும் சிரமப்பட வேண்டி ஏற்படும். வியாபாரத்திற்காக நான் எடுத்துக்கொள்ளும் சிரமம் சாதாரணமானது ஆனால் வியாபாரத்தில் எனக்குக் கிடைக்கும் லாபம் அசாதாரணமானது."

நோயுற்றுக் கிடக்கும் ஒருவன் குடலைப் பிடுங்கும் கசப்பான மருந்தைக் குடிக்கிறானே, அதற்குக் காரணமென்ன? தான் குடிக்கும் மருந்து கசப்பானது என்பதில் அவனுக்குச் சந்தேகமில்லை. என்றாலும் ஆரோக்கியத்தை எதிர்பார்த்துக் கசப்பைச் சகித்துக் கொள்கிறான்.

வில்லும் அம்பும் ஏந்தி வேட்டையாடச் செல்கிறார்களே சிலர், அவர்களுக்குத் தம் வெற்றியில் முழு நிச்சயம் இருக்கிறது என்று எண்ணுகிறீர்கள்? தவறு. வேட்டையாடப்போன எத்தனையோ பேர் ஒரு சிட்டுக் குருவியும் இல்லாமல் திரும்பி வந்திருக்கிறார்கள் அப்படியானால் சந்தேகமான ஒன்றுக்காக நிச்சயமான நேரத்தையும் சக்தியையும் ஏன் அவர்கள் செலவிட வேண்டும்? இதற்கெல்லாம் காரணம் ஒன்றுதான். நிச்சயமான ஒன்றைவிட சந்தேகமான ஒன்று அதிகப்பயனைக் கொடுக்கிறது.

எனவே மறுமையில் உங்களுக்குச் சந்தேகம் இருந்தால் தனித்த இடத்தில் அமர்ந்து ஆழ்ந்து சிந்தனை செய்யுங்கள். உங்கள் மனத்துக்கு இப்படிக் கூறுங்கள்: "மறுமையின் இன்பங்கள் வருணனைக்கு அப்பாற்பட்டவை. இம்மையை அடைவதற்கு மறுமையே சிறந்த வழி நான் இம்மையைப் பயன்படுத்துவதைப் பொறுத்துதான் இருக்கிறது மறுமையின் வெற்றி. இங்கு நான் ஒழுக்கத்துடன் நடந்துகொண்டால் அங்கு எனக்காகப் பேரின்பம் காத்திருக்கும்."—இப்படி மெதுவாகப் பேச்சை ஆரம்பியுங்கள்.

"நான் மறுமையில் அவசியம் வெற்றியடைய வேண்டும். எனவேதான், என் மனமே, நீ கொஞ்சம் பொறுமையோடு நடந்துகொள்ள வேண்டும். அப்படியொன்றும் நீ அதிக நாள் சிரமப்பட வேண்டியதில்லை. ஏனெனில் எந்த மனிதனும் உலகில் நீண்டநாள் உயிர் வாழ முடியாது. இன்றிலிருந்து. இன்னும் அறுபது அல்லது எழுபது ஆண்டுகளுக்கு மேல் நீ இங்கு இருக்கப்

போவதில்லை. நீ விரும்பினாலும் விரும்பா விட்டாலும் இம்மையை நீ தியாகம் செய்துதான் ஆகவேண்டும். இந்த அறுபது, எழுபது ஆண்டுகள் நீ சிரமப்பட்டால் போதுமானது. மறுமையைப் பற்றிக் கூறப்படும் செய்திகளை வைத்துப் பார்க்கும்போது இந்தக்கால வரம்பு மிகச் சிறியது என்றே தெரிகிறது.''

இப்போது உங்கள் மனத்தைப் பார்த்து அழுத்தம் திருத்தமாக இப்படிக் கூறுங்கள்:

''மறுமையைப்பற்றி நீ சந்தேகப்படுகிறாயா? மதிமயக்கம் கொண்டவர்கள் சொல்வதுபோல், அது தோன்றவும் செய்யலாம், தோன்றாமலும் போகலாம் என்று நினைக்கிறாயா? மறுமை என்று ஒன்று இருந்தால் இருக்கட்டும்: இல்லாவிட்டால் போகட்டும். ஆனால் அப்படி ஒன்று வந்துவிட்டால் நீ சிரமப்படக்கூடாது. எனவே இப்போதே ஒழுக்கத்துடன் நடந்துகொள். மறுமையே இல்லாவிட்டாலும் பரவாயில்லை. அதனால் உனக்கு எந்த இழப்புமில்லையல்லவா?

''திருத்தூதர்கள் குறிப்பிட்டுச் சென்ற விவரங்களை எண்ணிப் பார். உலகில் தோன்றிய திருத்தூதர்கள் அனைவரும் மறுமையை எடுத்துரைத்திருக்கிறார்கள். திருத்தூதர்களில் மறுமையை மறுத்தவர் எவருமில்லை. அவர்கள் கூறியது உண்மையா, பொய்யா? நீ குழம்பவேண்டாம் உண்மையாக இருந்தாலும் பொய்யாக இருந்தாலும், இம்மையில் நல்லபடியாக நடந்துகொள். ஒருக்கால் அவர்கள் சொன்னதுபோல் மறுமை என்று ஒரு வாழ்க்கை ஏற்பட்டு, இன்பமும் துன்பமும் உன் கண்களில் நிழலாட ஆரம்பித்து விட்டால் அப்புறம் உன்னால் எதுவும் செய்ய முடியாது.. எனவே இப்போதே செயலாற்று''—இப்படிக் கூறி உங்கள் மனத்தைப் பக்குவப் படுத்துங்கள். ★

*அக்டோபர் இதழின் தொடர்*

# விஞ்ஞானமும் கலையும்!

மூலம் :

முஹம்மது

மார்மடியூக் பிக்தால்

(ஆங்கில முஸ்லிம்)

தமிழ் :

**ஆர். பி. எம். கனி,**

**பி. ஏ., பி. எல்.**



வைத்தியத்தில் அவர்கள் சாதித்தவை மகத்தானவை. கிரேக்கர்களின் வைத்திய முறையான யூனானி முறையை அரபிகள் கைக்கொண்டு தமது அனுபவப் பூர்வமான வழிகளால் அதை மதிப்புள்ளதாக்கினர். அந்த முறை ஆசிரியர்களாலும், ஐரோப்பியராலும் பல நூற்றாண்டுகள் ஒருங்கே ஏற்று அனுஷ்டிக்கப்பட்டது. முஸ்லிம்களுடைய முயற்சியும், கல்வியும் மட்டும் இல்லையாயின் யூனானி முறைக்குக் கிரேக்கர் தந்த அடிப்படைகள் அழிந்துபட்டிருக்கும்.

சுத்தமான காற்று, பூரணமான சுத்தம் ஆகியவற்றின் பெருமைகளை முஸ்லிம் வைத்தியர்களே முதலில் விளக்கினர். ஆஸ்பத்திரிகள் ஏற்படுத்தி, அங்கு நோயாளிகளை, நோய்க்குத் தக்கவாறு வெவ்வேறு இடங்களில் சேர்த்து அவை அவை சுத்தமாகவும், காற்று வரக் கூடியதாகவும் இருக்கும் படி முதன் முதலில் செய்த பெருமை முஸ்லிம்களையே சேரும்.

பிற்காலத்தில் — அதாவது 18ம் நூற்றாண்டில்— உலோக நீர் சுரக்கும் சுனைகளின் பெருமையையும், தண்ணீரையும், காற்றையும், மாற்றிக் கொள்வதால் ஏற்படும் நன்மையையும் பற்றி ஐரோப்பியருக்குக் கற்றுத் தந்தது துருக்கியர் தான். தொத்து வியாதிகளைத் தடை செய்வதற்கான இறுகுலேஷனைப் பற்றியும் 18-ம் நூற்றாண்டில் துருக்கியரிடம் இருந்துதான் ஐரோப்பியர் கற்றுக் கொண்டனர்.

அவர்கள் கையாண்டு வந்த வான சாஸ்திரத்தில் பெரும் பகுதி ஜோதிஷமாயிருந்தது உண்மையே. ஆனால் அவர்கள் வானை ஆராயும் பூதக் கண்ணாடியுடன் சோதனாலயங்களும் (நக்ஷத்திர பங்களாக்களும்) ஏற்படுத்தியிருந்தனர். இவற்றில் நாம் நன்கறிந்தது ஸ்பெயினிலுள்ள பார்வை நிலையத்திலிருந்தது தான். சமர்கந்திலும் அத்தகைய பூதக் கண்ணாடியுடன் கூடிய வான் ஆராயும் நிலையமொன்றிருந்தது.

வான நூல் வல்லுனர்கள், பூகோள சாஸ்திரிகளோடும், கணித நிபுணர்களோடும், பிரயாணிகளோடும் உறவாடித் தமது முடிவுகளை உறுதி செய்துகொள்வதுண்டு. இவ்விதம் கலந்து உரையாடிய தனாலேயே முஸ்லிம் ஸ்பெயினிலிருந்த சர்வகலாசாலைகளில் பாடம் போதிப்பதற்காகச் செய்யப்பட்ட ஏற்பாடுகளில் சுழலும் பூமியுருண்டையும் ஒன்ருக இருந்தது. அதே சமயத்தில்தான் பூமி சுற்றுகிறது என்று சொன்னதற்காக புரூனே என்பவரை கிறிஸ்தவப் பாதிரிகள் மெதுவாக எரியும் நெருப்பிலிட்டுக்கொன்றனர். அதற்குச் சற்று முன்னர் மகா பெரிய அறிஞன் கலீலியோ உலகம் சுற்றிக் கொண்டிருக்கிறது என்று சொன்னதற்காகச் சித்திரவதை செய்யப்பட்டான். உலகம் பைபிளில் சொல்லப் பட்டிருப்பது போல அசையாமல்தான் இருக்கிறது என்று எழுதி அதில் அவனிடம் நிர்ப்பந்தமாகக் கையெழுத்து வாங்கினர். அந்தப் பொய்க்குக் கீழே தன் கையெழுத்தைப் போடும்போதும், அந்த அறிஞன் முனங்கினன், 'இருந்தாலுங்கூட அது சுற்றத்தானே செய்கிறது' என்று. ஸ்பெயினிலிருந்த முஸ்லிம் சர்வகலாசாலைகளிடமிருந்தே கொலம்பஸ்கூட உலகம் உருண்டையாக இருக்கிறது என்பதை அறிந்துகொண்டான். ஆனல் பின்னர் அவனையும் பாதிரிகள் சித்திரவதை செய்து அந்த அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ளும்படி செய்தனர். மூன்ருவது அப்துர் ரஹ்மானுடைய காலத்தில் ஸ்பெயின் சர்வகலாசாலைகளிலும், அல் மாமூன் காலத்தில் பக்தாதிய சர்வகலாசாலையிலும் கிறிஸ்தவ, யூத மாணவர்கள் வரவேற்கப்பட்டனர்; இவர்களில் நூற்றுக் கணக்கானவர்களின் செலவுக்கு அரசாங்கம் பண உதவி செய்தது. மேற்கத்திய நாடுகள் அந்த உணர்ச்சியில் தான் பாதிரிகளுடைய பிடிப்பிலிருந்து விடுதலை பெறத் தொடங்கின. கிறிஸ்தவப் பாதிரிகள் மக்களைச் சித்திரவதை செய்தனர்; கொடுமைப் படுத்தினர்; அறிஞர்களை நெருப்பிலிட்டனர். ஆனல் இன்று ஐரோப்பா அடைந்துள்ள முன்னேற்றத்திற்கு அடிப்படையை உதவியது இஸ்லாம்தான். அறிஞர்களைத் துன்பத்திற்குள்ளாக்கியும், சித்திரவதை செய்தும்; நெருப்பிலிட்டு உரித்துங்கூடக் கொடுமைசெய்த கிறிஸ்தவத்துக்கு ஐரோப்பா எந்த வகையிலும் கடமைப்பட்டில்லை.

இப்போது நாம் கலையைப் பற்றிக் கவனிக்கலாம் :

சிற்பத்திலும், சித்திரத்திலும், ஒரு சில ரகங்கள் வரைவது மட்டுமே முஸ்லிம்களிடையே பழக்கத்தில் இருந்து வந்தது. உயிருள்ளவற்றின் உருவங்களைத் தீட்டுவது விக்ரஹ ஆராதனையோடுதொடர்புள்ளமையாக இருந்ததால் அவற்றை தீட்டவில்லை. திருக்

குர்ஆனிலும் சரி, நமது நபி பெருமானாரின் ஆதாரப் பூர்வ மான திருமொழிகளிலும் சரி, இது சம்பந்தமான நேரடி யான உத்திரவு எதையும் நான் காணவில்லை ஒரு பார சீகச் சைத்ரீர்கன் நடிகள் நாதரிடம் வந்து, அவர்கள் உருவப்படத்தைத் தீட்டவும் அதைப் பாரசீகத்துக்கு எடுத் துச் சென்று அங்குள்ள மக்க ளிடம் காட்டவும் அனுமதிக்கு மாறு வேண்டினான். அதற் குத்தான் நபிகள் பெருமானார் (ஸல்) இணங்க மறுத்தார் கள். அப்படத்தை விக்ரஹ

ஆராதனைக்கு உட்படுத்தி விடலாம் என்று எண்ணியே அவ்விதம் செய்தார்கள். மதக் கண்டிப்பற்ற பாரசீகத்திலும், அதன் செல்வாக்குப் பெற்ற நாடுகளிலும், குறிப்பாக இஸ்லாமிய வீழ்ச்சியின் ஆரம்பத் திற்குப் பின் உருவப்படங்கள் எழுதுவது வழக்கமாயிற்று. அவற்றை. இஸ்லாமியக் கலை யாகக் கூறமுடியாது. இதே காரணத்தால்—விக்ரஹ ஆரா தனையோடு தொடர்பு கொண்ட-சங்கீதம், நாடகம் ஆகி யவையும் இழிவாகக் கருதி ஒதுக்கப்பட்டன. பொதுமக்க ளின் மகிழ்வு சங்கீதத்தைக் காப்பாற்றிற்று; ஆனால் அது விருந்தின் ஒரு பகுதியாக வன்றி, கலையாகக் கருதப்பட வில்லை. 'அதான்' எழுப்பும் மோதீன்கள் பொதுவாக இனி மையான குரலுடையவர் களாக இருந்தனர். எனவே இவர்கள் பாடுவதை அன் றைய முஸ்லிம் உலகம் ரஸித்து வரவேற்றது. பொதுக்கூட்டங் களில் இவர்கள் பாடல்களுக்கு முக்கிய இடமிருந்தது.

நாடகத்தைப் பொறுத்த வரை, ஒரு முஸ்லிம் ஆணோ, பெண்ணோதான் அல்லாத வே ரொருவருடைய வேஷத்தைப் போட்டுக்கொண்டு ஆடுவது முஸ்லிம் கண்ணியத்திற்கே இழுக்குத் தருவதாகக் கருதப் பட்டது. கிரேக்க, அர்மேனிய நாடோடி நடிகர்கள்தான் இவற்றில் ஈடுபட்டிருந்தனர்.

முஸ்லிம் உலகில் நிழலாட் டம் என்ற நிழல் காட்சிகள் தான் முக்கிய இடம்பெற்றிருந் தன. திருவிழாக்களில் இந்த நிழலாட்டம் நடைபெறுவ துண்டு. இதில் வகைவகை யான கதைகளைச் சித்தரிப் பார்கள். இதில் அறிஞர்கள் கூட ஆர்வங்காட்டி யிருக்கின் றனர். உமர் கைய்யாம் தன் னுடைய ருபாயியாத்தில் இந்த நிழல்படங்களைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

கையாம் என்ற வார்த்தை, முஸ்லிம் உலகில் கைதேர்ந் திருந்த இன்னொரு கலையை நினைவுக்குக் கொண்டு வருகி றது. கூடாரங்களின் உள்ளே வர்ணம் பூசும் கலை அது. கைய்யாமின் மகள்—கூடாரம் செய்வோர்—வெறும் வர்த்தகர் ளாக மட்டும் இன்றி மிகுந்த திறமையுள்ள கலைஞர்களாக வும் இருந்தனர். கூடரங்களின் உட் பக்கங்களில் இவர்கள் பூவேலைப்பாடுகள் செய்வதில் பிரசித்தி பெற்று விளங்கினர்.

நிழலாட்டங்கள் பலவற்றை நானே பார்த்திருக்கிறேன். சிறிய ஆசியா, சிரியா, எகிப்து ஆகியவற்றில் பத்தொன்ப தாம் நூற்றுண்டின் பிற்பகுதி யில்கூட இவை காட்டப்பட்டு வந்தன. இவை எத்தனை திறமையோடு காட்டப்பட் டன, இவற்றைக்காட்டுபவன் எத்தனை இன்பமான ஹாஸ்ய மொழிகளைப் பேசினான். என் பதை நான் இப்போதுகூட நினைவு கூர்கிறேன். நான் பார்த்த காட்சிகளில் நிழலாட் டங்களே என்னைப் பெரிதும் மகிழ்வித்தன. (தொடரும்)




# 8. பலாஜியஸின் காதல்!

"வரும் ஞாயிற்றுக்கிழமைஇந்த அரபியருக்குக் கடைசி நாளாக இருக்கட்டும்!" என்று ராடரிக் மன்னன் குறிப்பிட்ட நாளும் வந்து போயிற்று!

அன்று ராடரிக் மன்னனேடு வந்திருந்த சேஞ வெள்ளம், போர் முரசம் கேட்டதும் முன்னேறிச் சென்றது.

அந்த நாளே எதிர்பார்த்து பொறுமை இழந்து கொண்டிருந்த அரபியரும் பர்பர் வீரர்களும், கால்நடை மந்தைகளுக்குள் புகுந்த சிங்கங்கள் என எண்ணும்படி எதிரி வீரர்களின் உயிரைக் குடித்துக் கொண்டிருந்தனர். தாரிக்கைப்பின்பற்றிமற்ற படைத்தலேவர்களும் தம்உயிரை மதியாது எதிரி அணிவகுப்புக்களேப் பிளந்துகொண்டு உள்ளே நுழைந்து ஸ்பானிய சேனேயைச் சிதற அடித்துக் கொண்டிருந்தார்கள்.

ராடரிக்கின் சேனேக்குள் குழப்பமும் கூச்சலும் மிகுந்திருந்ததே அன்றி உண்மையாகப் போரிடுவோர் மிகக் குறைவாகவே காணப்பட்டனர். துணிந்து சண்டை செய்தவர்களும்அந்தக் குழப்ப நிலே காரணமாக, தாக்குப் பிடிக்க முடியாமல் பெருமளவில் பலியாகிக் கொண்டிருந்தனர்.

முஸ்லிம் வீரர்களுக்கு ஈடு கொடுத்துக் கொண்டுஓரளவுக்கு அவர்களே வெட்டி வீழ்த்துவதிலும் அன்று வெற்றி கண்டவர்கள், ராடரிக் மன்னனேச் சூழ நின்றுபோரிட்ட இரும்புக் கவசம் தரித்த படையினரும், புரட்சி வீரன் பலாஜியஸ், முர்சியா மாநிலத்தின் கவர்னர் தியோடமிர் ஆகியோரின் வீரர்களுமே. ஆஞல் ராடரிக்கின் முழுச்சேனேயோடும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது அவர்களுடைய எண்ணிக்கை மிகக் குறைவு என்று

தான் கூற வேண்டும்.

ராடரிக்கினுல் சிம்மாசனத்தையும் உயிரையும் இழந்த விட்டிஸா சக்கரவர்த்தியின் மக்களும், நெருங்கிய உறவினர்களும், விட்டிஸாவின் முன்னுள் ஆதரவாளர்களும் தலைமை வகித்து நடத்திக் கொண்டு வந்திருந்த படைகள் அனைத்தையும் தன் சேனையின் பின்னணியில் நிறுத்தி வைத்திருந்தான், மன்னன் ராடரிக். அவர்களுடைய விசுவாசத்தில் அந்த அளவுக்கு நம்பிக்கையின்மை ஏற்பட்டிருந்தது மன்னனுக்கு.

மன்னனின் மனப் போக்கு அவர்களுக்கும் தெரியாமலில்லை. அரசனுக்காக இல்லாவிட்டாலும் நாட்டைக் காப்பாற்ற வேனும் தம்மால் இயன்ற முயற்சி செய்ய வேண்டும் என்ற நல்லெண்ணத்துடன் வந்தவர்களுக்கும் மனக் கசப்பு ஏற்படும்படி செய்தது மன்னனின் செய்கை. 'எப்படியாவது ஒழிந்து போகட்டும்!'' என்ற எண்ணம் அவர்களுடைய உள்ளங்களிலேதோன்ற ஆரம்பித்தது.

மாலை நேரம் செல்லச் செல்ல சண்டை சூடு பிடித்து உக்கிரமாகிக் கொண்டுவந்தது அன்று இரவு வருவதற்குள்ளாகவே போருக்கு ஒரு முடிவு கண்டு, அரபியரைத் தோற்று ஓடச் செய்து தன் சபதத்தை நிறைவேற்றிவிட வேண்டுமெனத் துடித்துக் கொண்டிருந்தான் மன்னன்.

அந்த வேகத்தில் தன் உயிரையும் மதியாது அரபியரை எதிர்த்து முன்னேறத் தொடங்கினுன் அவன். அவனிடம் முழு விசுவாசம் கொண்டிருந்த கவசப்படைப் பகுதியும் அவனைப்பின்பற்றி முன்னேறியது. இளவரசன் ஈஸாவின் தலைமையில் திரண்டுநின்ற இஸ்லாமியப் படைப் பிரிவு மன்னனை எதிர்த்துப் போரிட்டது ராடரிக்கின் உயிரை எப்படியேனும் வாங்கிவிட வேண்டுமென்று முடிவுசெய்துவிட்ட ஈஸா அன்று படு வேகமாகச் சுற்றிச் சுழன்று எதிரிவீரர்களை வெட்டி வீழ்த்திக் கொண்டே, மன்னனை நெருங்க முயன்று கொண்டிருந்தான், ஆனுல் அரசனின் இரும்புக் கவசம் தரித்த படையினர் அவனை எதிரிகள் நெருங்கவொட்டாமல் தம் உயிரைக் கொடுத்துப் போராடிக் கொண்டிருந்தனர். இருதரப்புப் படையினரும் மோதிக்கொண்டிருந்ததால் எழுந்த பெரும் புழுதிப்படலத்தினுல் அந்திநேரம் வந்து விட்டது போலத் தோன்றவும் மன்னன் தன் சபதம் அன்று நிறைவேருமல் போய் விடுமோ என்றுகூட சிறிது நேரம் சஞ்சலப் பட்டான்.

சண்டை நீடித்துக் கொண்டே சென்றது. இரவும் வந்தது. ராடரிக்அஞ்சியபடிஅவனுடைய சபதம் நிறைவேருமலேயே அன்றைய பொழுது கழிந்து விட்டது!

இளவாசன் ஈஸாவின் ஆசையும் நிறைவேறவில்லை. எனினும் மறுநாள் சண்டையின் போதாவது எப்படியேனும் முயன்று ராடரிக் மன்னனைக் கொன்று வீழ்த்திவிட வேண்டுமென்று தன் உள்ளத்தினுள்ளாக உறுதி கொண்டான் ஈஸா.

அன்றிரவு தியோடமிர்,பலாஜியஸ் இருவரையும் தன் கூடாரத்திற்கு அவசரமாக அழைத்து வருமாறு ஆட்களை அனுப்பி விட்டு சிந்தனையில் ஆழ்ந்திருந்தான் மன்னன். அன்று நடந்த சண்டையின் போக்கு அவனுக்கு சிறிதும் திருப்தி அளிக்காததால் அளவு கடந்த கோபம் ஏற்பட்டிருந்தது அவனுக்கு.

பன்னீராயிரம் பேர்கொண்ட எதிரிப்படையில் கொல்லப்பட்டவர்களும் காயமடைந்தோரும்

ஓராயிரத்திற்கும் குறைவாகவே இருக்க எதிரிப் படையின் எண்ணிக்கையை விடக் கூடுதலான அளவில் தன் சேனையில் சேதம் ஏற்பட்டிருப்பதை உணர்ந்து வியப்பும் பெரு வேதனையும் கொண்டான் மன்னன்.

மறுநாள் மீண்டும் அத்தகைய நிலைஏற்படாமல்எதிரிப்படையை வெற்றிகரமாகச் சமாளித்து அழிப்பது எப்படி என்று ஆலோசனை நடத்துவதற்காக அவ்விரு படைத் தலைவர்களையும் மன்னன் அழைத்துவரச் சொன்னான்.

முதல்நாள் அனுபவத்தைக் கொண்டு பார்த்தபோது அவ்விரு படைத்தலைவர்களைத் தவிர வேறு எவர்மீதும் நம்பிக்கை வைத்து பெரிதாக எதையும் எதிர்பார்க்க முடியாது என்று உறுதியாகப் பட்டது மன்னனுக்கு.

ஆனால் அவ்விருவரும் வந்தபோது அவர்களிடம் ஏற்பட்டிருந்த மாறுதலைக்கண்டு மன்னன் மேலும் மனக் கலக்கமடைந்தான். இஸ்லாமியப் படையின் கட்டுப்பாடு, போர்த்திறன், வீர, வேகம் ஆகிய அனைத்தையும் அன்று நேரில் கண்டு அனுபவித்து, ஸ்பானியரோடு ஒப்பிட்டுப் பார்த்த தியோடமீர் மறுநாள் சண்டையின் முடிவு பற்றி நம்பிக்கை இழந்து விட்டிருந்தான் என்பது அவனுடைய பேச்சிலே தொனித்தது.

ஆனால் பலாஜியஸின் நிலைமையோ வேறு விதமாக இருந்தது.

இளவரசர் உமரின் தலைமையில் முன்னேறி, வீர சாகசங்கள் பல புரிந்துகொண்டிருந்த படைப் பிரிவைப் பின்பற்றி ஓர் அழகிய இளமங்கை குதிரைமீது அமர்ந்து அன்று முழுதும் தொடர்ந்து கொண்டிருந்ததை பலாஜியஸ் பார்த்தான்.

முஸ்லிம் வீரர்களுக்கு வீராவேசமூட்டி, ஸ்பானியர் வெட்டுண்டு மடியும் போதெல்லாம் மகிழ்ச்சி தெரிவித்துக் கொண்டிருந்தாள் அவள். குறிப்பாக அப்பிரிவின் தலைவனான இளவரசன் உமரின் மீதே அவளுடைய கண்கள் எப்போதும் லயித்திருந்தன. அவன் எதிரி வீரர்களை வென்று வீழ்த்திய ஒவ்வொரு தடவையும் அவள் தூரத்திலிருந்து கைக்குட்டையை வீசிக் காட்டி தனக்கேற்பட்ட ஆனந்தத்தை வெளிப்படுத்தினாள்.

ஸ்பானிய கிறிஸ்தவப் பெண் போலத்தோற்றமளித்த அவ்வழகியின் செயல் பலாஜிபஸுக்கு ஆச்சரியத்தையும் அதே நேரத்தில் ஆத்திரத்தையும்அளித்தது. அதற்குமேல் விசாரித்து அவள்

## திருமணம்

குத்தாலம் திரு. இராம. வீராசாமி முதலியார் அவர்களின் புதல்வரும், சென்னை செங்குந்த மித்திரன் அச்சக மேலாளர் திரு. வீ. சம்பந்தன் அவர்களின் இளவலுமான திரு வீ குஞ்சு, பி. ஏ. அவர்களுக்கும், சுந்தரப் பெருமாள் கோவில் திரு. டி. சம்பூரய்யா அவர்களின் புதல்வி செல்வி பானுமதிக்கும் சுவாமி மலையில் 1-12-66ல் திருமணம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. மணமக்கள் எல்லா நலனும் பெற்று நீடூழி வாழ வாழ்த்துகிறோம்.

தான் சியூட்டா சிற்றரசன் ஜூலி யனின் மகளான புளோரிந்தா என்னும் பிரசித்தி பெற்ற பேர ழகி எனத் தெரிந்து கொள்ள அவனுக்கு வெகுநேரமாகவில்லை.

அவளுடைய அழகைப் பற்றி ஸ்பானியப் பிரபுக்களும் இளவர சர்களும் கேள்விப் பட்டிருந் ததைப் போலவே பலாஜியஸும் கேள்விப்பட்டிருந்தான். அன்று அவளை அந்தசூழ்நிலையில் கண்ட போதும் கூடத் தான் கேள்விப் பட்டது எதுவும் மிகையல்ல, அவள் இணையற்ற அழகிதான் என்று அவனுக்குத் தோன்றி யது.

அவளுடைய கண்ணசைந் தாலே போதும். அவளுக்காகத் தம் உடல், பொருள், ஆவி அனைத்தையும் தத்தம் செய்வ தற்குத் தயாராக எத்தனையோ ஐரோப்பிய இளவரசர்களும், பிரபுக்களும் காத்திருப்பார்கள் என்பதில அவனுக்கு ஐயமில்லை. அப்படியிருக்க அவள எதிரிகளு டன் சேர்ந்துகொண்டு அந்நிய இளைஞன் ஒருவனுக்காக ஏங்கு வதும் விரோதிகளின் வெற்றி யைக் கண்டு மகிழ்வதும் அவ னுக்குப் பெரும்புதிராகத் தோன் றின. ஏதோ ஒரு கசப்பான உணர்விஞல் பாதிக்கப் பட்டுத் தான் அவள் அவ்வாறு நடந்து கொண்டிருக்க வேண்டும் என நினைத்தான் அவன். அதோடு அவனுடைய ஆத்திரம் அனைத் தும் அவளுடைய தந்தையான ஜூலியன் பிரபுவின் மீது திரும்பி யது. அந்தஇனைத்துரோகிதானே முஸ்லிம்களுக்கு கப்பல்களைக் கொடுத்து உதவி வழிகாட்டி அழைத்து வந்திருக்கிறுன்! அவனேதான் அவளுக்கும் துர்ப் போதனை செய்து அவளுடைய உள்ளத்தை அந்த அளவுக்குக் கெடுத்து விட்டிருக்கிறுன்! இல் லாவிட்டால் நிகரற்ற அழகியான ஒரு கிறித்தவ இளவரசி அவ் வாறு நடந்து கொள்வது இயற் கைக்கு விரோதமானது என்று தோன்றியது அவனுக்கு.

அவனுடைய படைக்கும் உமரின் படைப் பிரிவுக்கும்தான் அன்று முழுதும் மோதல நடந்து

கொண்டிருந்தது. உமரும் பலாஜியஸும் யுத்த களத்தில் அன்று நேருக்கு நேர் மோதிக் கொள்ளவில்லை சண்டையில் ஈடுபட்டிருந்த பலாஜியஸின் கண்கள் அடிக்கடி இளவரசி புளோரிந்தா குதிரையின் மீது வீற்றிருந்த பக்கமாகத் திரும்பி அவளுடைய போக்கையும் செயலையும் கவனித்துக் கொண்டிருந்தன. நேரம் ஆக ஆக அவனுக்கு முதலில் தோன்றிய ஆத்திரம் அனுதாபமாக மாறிக்கொண்டு வந்தது. இறுதியில் மாலை நேரத்தில் அது அவள் மீது ஆசையாக மாறி அவளை எப்படியேனும் கவர்ந்துவந்து தன்னுடையவளாக்கிக் கொள்ள வேண்டுமென்ற வெறியாக முற்றியது. அவ்வாறு செய்வதற்கு அன்று அவனுக்கு வாய்ப்பு கிடைக்கவில்லை மறுநாளாவது தன்எண்ணத்தைஎப்படியாவது நிறைவேற்றிக்கொள்ள வேண்டுமென உறுதி கொண்டவனாக பலாஜியஸ் போர்க் களத்திலிருந்து தன் கூடாரத்திற்குத் திரும்பி வந்தான்.

# 9. மன்னனின் முடிவு?

பலாஜியஸ், மன்னனோடு பேசிய போது அவனுடைய உள்ளக் கிடக்கை ராடரிக்கிற்கு நன்கு வெளிப்பட்டது. புரட்சித் தலைவனின் உள்ளத்திலே காதல் அரும்பி வெகுவிரைவில்மலர்ந்து விட்டதைக் கண்டு அந்த நிலையிலும் மன்னனுக்கு சிரிப்பு வந்தது.

அந்த அளவுக்கு அவனுடைய உரையாடல் முழுவதும் அவளைச் சுற்றியே இருந்தது. சில சமயங்களில் அவனுடைய பேச்சு மன்னனுக்கு சங்கடத்தை விளைவித்தது.

''எதிரிகளோடு கலந்துறவாடிக் கொண்டு அவர்களுடைய வெற்றிக்காகப் பாடுபடும் அளவுக்கு அவள் நம் மீது குரோதம் கொள்ளும்படி செய்த நிகழ்ச்சி என்னவாக இருக்குமோ?'' என்று பலாஜியஸ் ராடரிக் மன்னனிடமே கேட்டபோது அவனுடைய குற்றமுள்ள நெஞ்சிலே குறுகுறுப்புஏற்பட்டது. அந்தப் பேச்சைத் தட்டிக்கழிக்க முயன்ருன் ராடரிக்.

''என்னதான் காரணம் இருந்தாலும் அவள் மாத்திரம் என் கையில் சிக்கி விட்டால் அவளுடைய மனம் மாறிவிடும் அவளைப் போன்ற ஒப்பற்ற அழகியான ஒரு கிறிஸ்தவ இளவரசி அந்நிய இனத்தவரின் கையில் சிக்கி அவர்களுள் ஒருவனின் மனைவியாகக் கூடும் என்று எண்ணும் போதே என் இரத்தம் கொதிக்கிறது. என் திட்டப்படி அவளைக் கவர்ந்து கொண்டு வந்துவிட்டேனுனல் அது ஜூலியனின் துரோக சிந்தைக்குப் பழிவாங்கியதாகவும் இருக்கும்!'' என்ருன் பலாஜியஸ்.

''புரட்சி வீரரின் உள்ளத்தில் முளைத்திருக்கும் புதுக்காதல் கடமையை மறக்கச் செய்து விடாமல் இருக்க வேண்டும். நம்முடைய லட்சியம் எதிரியை அழித்து ஒழிப்பதே தவிர புளோரிந்தாவைக் கைப்பற்றுவது அல்ல. விரோதிப்படையின் மீது வெற்றிகொண்டு விட்டால் புளோரிந்தா நம் கரங்களில் தானே வந்து விழுவாள். சியூட்டாவிற்குத் தப்பியோடும்படி நாம் விட்டுவிடப் போவதில்லை!''

மன்னனின் குத்தல் நிறைந்த இந்த வார்த்தைகள் பலாஜிய

ஸைச் சற்றே சினங்கொள்ள செய்தன.

''எந்த நிலைமையிலும் கடமையுணர்வை மறந்துவிடக் கூடியவனல்ல நான். புளோரிந்தா எதிரிகளிடம் இருப்பதே அவர்களுக்கு ஓரளவு ஊக்கமளிப்பதாக நான் நினைக்கிறேன். அவளைக் கவர்வது நாம் பெறப்போகும் வெற்றியின் ஒரு பகுதியேயாகும். எப்படியும் நாம் நாளைய போரில் எதிரிகளை முறியடித்துவிடுவோம் அவர்கள் அனைவருமே இன்று நேரடியாகப் போரில் ஈடு பட்டுக் களைத்துப் போயிருக்கிறார்கள். இன்றைய சண்டையில் ஈடுபடாமல் போரிடத்துடித்துக் கொண்டிருக்கும் நம் சேனையின் புதிய படைப் பகுதிகள் நாளைய போரில் குதிக்கும் போது அவர்களுக்கு ஈடு கொடுக்க முடியாமல் எதிரிகள் திணறுவார்கள். அப்போது அவர்களுடைய அழிவு நிச்சயம்!''

''சபாஷ். பலாஜியஸ்! உம்முடைய உள்ள உறுதியை மெச்சுகிறேன். தியோடமிர் பிரபுவிடம்கூடத் தளர்ச்சி ஏற்பட்டிருப்பது கண்டு எனக்கு வேதனையாக இருந்தது. நீர் ஒருவரேனும் இவ்வளவு நம்பிக்கையோடு பேசுவது எனக்கு எவ்வளவோ மகிழ்ச்சியாக இருக்கிறது. வெற்றி நமதே! அதையும்நாளைப் போரிலேயே காண்போம்!''

மன்னன் இந்த சொற்களோடு முடித்துக்கொண்டிருந்தானுல் நன்ருகஇருந்திருக்கும். அப்படிச் செய்யாமல் அவன் அடுத்துப் பேசிய சொற்கள் பலாஜியஸின் உள்ளத்தைப் புண்படுத்தின.

''ஒன்று சொல்ல விரும்புகிறேன், பலாஜியஸ்! புளோரிந்தாவை மறந்து விடும்! அவள் நம்முடைய கையில் சிக்கப் போவது என்னவோ நிச்சயம் அப்போது அவள் உம்முடைய காதலியாகும் கௌரவத்தை அடையப்போவதில்லை. பயங்கரமான வழியில் அவளிடம் பழி தீர்த்துக் கொள்ளப் போகிறேன். பகிரங்கமான முறையில் அவமானப் படுத்தப் பட்டு சித்திரவதை செய்யப் படப் போகிருள் அவள்!''

''யாருடைய எண்ணம் நிறைவேறப் போகிறது. என்று பார்ப்போம்!'' எனத் தனக்குள் கூறிக் கொண்ட பலாஜியஸ் விடை

பெற்று மன்னனை விட்டு அகன் ருன்.

அன்றிரவும் ஜூலியன் பிரபு உறங்கவில்லை. விட்டிஸாவின் குமாரர்களும் அவர்களுடைய ஆதரவாளர்களும் சேர்த்துக் கொண்டு வந்திருந்த படைப் பகுதிகள் நேராகப் போரில் கலந்து கொள்ள அனுமதிக்கப் படாமல், பிரித்துவிடப் பட்டு பின்னுல் நிறுத்தப் பட்டிருந் ததும் அதனுல் அவர்கள் மன வேதனையடைந்து மன்னனின் மீதுவெறுப்புக்கொண்டிருந்ததும் ஒற்றர்கள் மூலமாக அவனுக்குத் தெரிய வந்திருந்தன.

எனவே, ஜூலியன் தன்னிச்சையாகவேதுணிந்து, யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் மாறு வேடமணிந்து கொண்டு எதிரி முகாமை நோக்கிச் சென்ருன். விட்டிஸாவின் குமாரர்களான தன் மைத்துனர்களுள் முக்கிய மான இருவரைச் சந்தித்து நீண்ட நேரம் பேசிவிட்டு திருப்தி யோடு தன் முகாமுக்குத் திரும்பி வந்தான் அவன்.

அடுத்த நாளன்று மீண்டும் மும்முரமானபோர் துவங்கியது.

தாரிக்கின் பிரிவை எதிர்த்த தியோடமிர் பிரபுவின் படை

பர்பர் வீரர்களின் தாக்குதலுக்கு ஈடுகொடுக்க முடியாமல் திணறிக் கொண்டிருந்தது.

துணைத் தளபதியான முகீத் ருமியும், சேனுதிபதி மூஸாவின் குமாரரான அப்துல் அஜீஸும் சமர்க்களத்தில் நுழைந்து அமர்க் களப் படுத்திக் கொண்டிருந்தார் கள்.

இளவரசன் ஈஸா அன்றும் கூட மன்னன் ராடரிக் நின்ற பகுதியையே குறிவைத்து முன் னேறினுன். அதற்கு முதல் நாளன்றுதான் செய்யத்தவறிய பணியை அன்று முடித்துவிட வேண்டுமென அவன் மீண்டும் உறுதி பூண்டான்.

அதேபோல பலாஜியஸின் கஸ்டைல் வீரர்கள் இளவரசன் உமர் நின்ற பகுதியை நோக்கி முன்னேறினர். முந்திய நாள ன்று செய்தது போலவே அன் றும் புளோரிந்தா உமரின் படைப் பகுதிக் கருகில் சுற்றி வந்து கொண்டிருந்தாள்.

தன்னுடைய யுத்தகள அனுப வங்களை புளோரிந்தா வந்து கூறக் கேட்டுக்கொண்டிருந்த மரியாவுக்கும் யூத அழகி ரேச்ச லுக்கும் தாங்களும் கூட நேரில் சென்று சண்டை நடப்பதைப் பார்க்க வேண்டும் எனத் தோன் றியது. எனவே அவ்விரு வரும் கூடக் குதிரைகளின் மீதமர்ந்து ஈஸாவின் படைப்பிரிவைத் தொடர்ந்து சென்றனர்.

நாள் முழுதும் சண்டை நீடித் தது. சந்தேகத்திற்குள்ளான படைப் பிரிவுகளனைத்தும் அதற்கு முந்தைய நாளன்று நடந்தது போலவே பின்ஞல் நிறுத்தப் பட்டிருந்தன.

அன்றும் ஸ்பானியர் தரப்பில் கடுமையான சேதம் ஏற்பட்டுக் கொண்டிருந்தது.

தனது முக்கியமான நோக்கம் இன்னும் நிறை வேருதிருப்பது கண்ட இளவரசன் ஈஸா பொறு மையிழந்துகொண்டேவந்தான்.

மூகீத், அப்துல் அஜீஸ், ஈஸா ஆகிய மூவரும் மன்னனின் படையுடனேயே மோதிக் கொண்டிருந்ததால்அவனுடைய கவசமணிந்த வீரர்களும்கூட ஒவ்வொருவராக மாண்டு கொண்டே வந்தனர்.

பொழுது அடைய இன்னும் சிறிதுநேரம் இருந்தது. பார்பேட் நதிக்கரை இரத்தப் பெருக்கினுல் சிவந்திருந்தது போலவே மேற்கு வானமும் செம்மை நிறம் கொண் டிருந்தது. இருள் வந்து சூழ்ந்து விட்டால் அன்றும்கூட ஒரு முடிவு இல்லாமல் அல்லவா போய்விடும் என்று ஈஸா ஏங்கி ஞன்.

எனவே வேறு யாரையும் இலட்சியம் பண்ணுமல் திட்ட மான முடிவோடு மன்னனை நோக்கி அவன் முன்னேறினுன். அவனுடைய உறுதியான முன் னேற்றத்தைத் தடை செய்ய அவனை எதிர்த்து வந்த வீரன் எவனுலும் இயலவில்லை. அத்த கையோர் வெட்டுண்டு மடிந் ததுதான் மிச்சம். அப்படிப் பட்ட ஆவேசம் ஒன்று அவனுள் புகுந்துகொண்டு அவனை ஆட் டிப் படைத்தது.

மன்னனை அணுகிவிட்ட ஈஸா அவனுடன் நேரடியாக வாள் வீச்சில் ஈடுபட்டான். ராடரிக் மன்னனும் பெருவீரன் ஆதலால் என்னதான் முயன்றும் ஈஸாவி ஞல் அவனை வீழ்த்த முடிய வில்லை.

ஆனுல் அவனுடைய வாள் திறம் கண்டு ராடரிக்கிற்கு பெரு

வியப்பு ஏற்பட்டது. அரபியரின் வாள்வீசும் திறன்பற்றி பலர் கூறக்கேட்டிருந்தாலும் அப்படி என்ன அசகாய சூரர்களாக இருக்கப்போகிறார்கள் அவர்கள் என்று எண்ணி அலட்சியமாக இருந்த மன்னன் உண்மையை நேரிலே கண்டான்.

ஈஸாவின் பொறுமை எல்லை கடந்து கொண்டே போயிற்று. இறுதியில் தன் திறமை, வலிமை யாவற்றையும் பிரயோகித்து ஒரு வெட்டு வெட்டினான். மன்னனின் கைவெட்டுண்டு அவனுடைய கனத்தவாள் எங்கோ போய் விழுந்தது. அடுத்த கணத்தில் ஈஸாவின் ஈட்டியும் மன்னனின் கழுத்தோரமாகப் புகுந்தது.

ஈட்டியை இழுத்து எறிந்து விட்டு தன் குதிரையைத் திருப்பி விட்டான் ராடரிக். தன் தலைவனுக்கு ஏற்பட்ட கதியை உணர்ந்து கொண்டதுபோலத்தலைதெறிக்க மின்னல் வேகத்தில் திரும்பி ஓடியது குதிரை! மன்னனின் முடிவு அதுதான் என்றுணர்ந்து கொண்ட இளவரசன் ஈஸாவின் உள்ளத்திலே இறைவன் பால் நன்றியுணர்வு தோன்றியது.

''லில்லாஹில் ஷுக்ரீ! (அல்லாஹ்வுக்கே என் நன்றியனைத்தும்)'' என அவன் உதடுகள் முணுமுணுத்தன. மன்னனையே படுகாயப் படுத்தி ஓடச்செய்த அம்மாவீரனை எதிர்க்க ஸ்பானிய வீரன் எவனும் அதற்குமேல் முன்வரவில்லை!

மன்னனுக்கேற்பட்ட கதியைப் பற்றி அறிந்த ஸ்பானிய வீரர்கள் சித்தம் கலங்கியவர்களாக சிதறியோடத் தொடங்கினர்.

முஸ்லிம் வீரர்கள் தத்தம் முகாமுக்குத் திரும்பினர், இரவாகி விட்டதால், தோல்வியுற்ற ஸ்பானியரைத் தொடர்ந்து செல்வது உசிதமெனத் தோன்றவில்லை அவர்களுக்கு. மன்னன் படுகாயப் பட்டுத் தப்பியோடினாலும், ஏராளமான வீரர்கள் சேதமானாலும்கூட ஸ்பானியரின் சேனையில் பாதிக்குமேல் அப்படியே இருந்தது அவர்களுக்குத் தெரியும். எனவே பொழுதுவிடியும்வரை காத்திருந்து அடுத்த நடவடிக்கை என்ன எடுப்பது என்பது பற்றி முடிவு செய்யலாம்என்று தளபதி தாரிக் நினைத்தான்.

தன்னுடைய கூடாரத்திற்குத் திரும்பி வந்து கொண்டிருந்த இளவரசன் ஈஸாவை நெடுக வாழ்த்தொலிகள் வரவேற்றன.

ஆனால் அவன்தன் கூடாரத்தினுள் அடியெடுத்து வைத்த போது அங்குதுக்கமே உருவாக வீற்றிருந்த ஜூலியன் பிரபுவைக் கண்டான்.

அவனைக் கண்டதும் எழுந்த ஜூலியன் ஈஸாவைத் தழுவிக் கொண்டு தேம்பினான்.

அதன் காரணத்தை அறியாமல் திகைத்த ஈஸா, ''பிரபு, என்ன நடந்தது கூறுங்கள். வெற்றி விழா கொண்டாடி இறைவனுக்கு நன்றி செலுத்த வேண்டிய நேரத்தில் நீங்கள் ஏன் கலங்கிக் கண்ணீர் சிந்த வேண்டும்?'' என்று கேட்டான்

''இளவரசே, உங்களுக்குத் தெரியாதா, நம் இருவருக்குமே ஏற்பட்டுள்ள இழப்பு?'' என்று ஜூலியன் கேட்கவும் மேலும் திகைப்படைந்தவனாக, ''என்ன, என்ன?'' என்று கேட்டான், ஈஸா.

(தொடரும்)

# வினா? விடை



★ ஜமாஅத்தெ இஸ்லாமியும் ஆர். எஸ். எஸ். ஸும் சமமாகுமா?

★ இந்தியாவுக்கு எதிராக சிரியா போட்டியிட்டது சரியா?

★ மேனனுக்கு டிக்கெட் கிடைக்காதது எதைக் காட்டு கிறது?

★ குர் ஆனுக்கு தகுந்த மொழி பெயர்ப்பில்லை என்பது சரிதானா?

ஆமினா பீவி, ஹபீபா கனி,
அய்யம்பேட்டை.

கே: இறந்தபின் கண்ணை தானம் செய்வதை இஸ்லாம் அனுமதிக்கிறதா?

ப: இறந்தவர்களின் உடலை எந்த வகையிலும் சிதைப் பதை இஸ்லாம் ஆதரிக்க வில்லை.

கே: செப்டம்பர், நவம்பர் முரசு இதழ்களில் தாங்கள் குறிப்பிட்டு எழுதியுள்ள எஸ். ஐ. ஈ. டி. பெண்கள் கல்லூரி எங்குள்ளது? தொடர்புகொள்ள தெளிவான முகவரி தேவை.

ப: கல்லூரியின் முகவரி பின்வருமாறு:

S. I E. T. Women's College,
94-B, Mount Road,
Madras-18.

கல்லூரிக்கு பொருள் உதவும் நோக்கம் இருந்தால் அல்ஹாஜ் ஏ. எம். உபைதுல்லா சாஹிப், பொருளாளர், எஸ். ஐ. ஈ. டி., 5. மரைக்காயர் லப்பை தெரு, சென்னை-1. என்ற முகவரிக்கு அனுப்பலாம்.

ஏ. கமாலுத்தீன்,
சாத்பாங்கூரா (மே. வங்கம்)

கே: வட்டிக்கடையில் இருந்துகொண்டு தொழலாமா, நோன்பு நோற்கலாமா?

ப: பிழைப்புக்கு வேறு வழியின்றி அத்தகையதொரு கடையில் ஊழியம் செய்ய நேர்ந்ததற்காக தொழுவதும் நோன்பு நோற்பதுமான கடமைகளை விட்டு விடலாகாது.

செய்யது அபூத்தாஹிர்,
சென்னை-2.

கே: இந்தியாவிடமிருந்து பெரும் அளவில் உதவிபெற்று வருவதும மத, கலாச்சாரத் துறைகளில் இந்தியாவுடன்

நெருங்கிய ஒற்றுமையுடையதுமான நேப்பாளத்தை, சீனாவுடன் நெருங்கிய உறவுகொள்ள விடாமல் கட்டுப் படுத்த இந்தியா விரும்பினால், அவ்வாறு செய்ய இயலாதா?

ப: ஓரளவுக்கு நிர்ப்பந்திக்க முடியும், ஆனால் அது ராஜதந்திரமாகாது, இந்தியாவைவிடப் பெரியதும் வலியதுமான சீனா போன்ற விஸ்தரிப்பு மனப்பான்மை படைத்த ஒரு வல்லரசுக்கு மிகவும் அண்மையிலுள்ள நேப்பாளம் சீனாவை பகிரங்கமாகப் பகைத்துக்கொள்ள விரும்பாது. எவ்வளவுதான் இந்தியாவுடன் நெருங்கிய தொடர்புடையதாயினும் நேப்பாளமும் இந்தியாவைப் போலவே முழு அளவில் சுதந்திரம் பெற்றுள்ள ஒரு நாடு என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. நம்முடைய உதவியைக் குறைப்பதோ நிறுத்துவதோ, அல்லது வேறு வகையில் அதை நிர்ப்பந்தப் படுத்துவதோ, அந்நாட்டை மேன்மேலும் சீனாவின் உதவியை நாடச்செய்து அதன் வலையில் விழத்தான் வழிவகுக்கும்.

# இறையடி சேர்ந்தார்கள்!

எங்களின் தந்தையும், காரைக்கால் நேஷனல் ஹார்ட்வேர் ட்ரேடர்ஸ் எம். ஏ. கபீர், சென்னை லிபர்ட்டி மோட்டார் ஸ்டோர்ஸ் அதிபர் எஸ். அப்துற் றஸ்ஸாக், எம். முஹம்மது அமானுல்லா (சிங்கப்பூர்) ஆகியோர்களின் மாமனாருமாகிய ஆலிஜனாப் ஏ. முஹம்மது ஹனீப் அவர்கள் (வள்ளக்குளம் ஆரம்பப் பள்ளியில் மாஜி முதல் தலைமை ஆசிரியர், சொக்கானை குரூப் பஞ்சாயத்து முதல் தலைவர்.) சிறிது காலம் நோய் வாய்ப்பட்டிருந்து எல்லாம் வல்ல இறைவனின் கட்டளைப்படி 25—11—66 வெள்ளிக்கிழமை பகல் 1-05க்கு தமது இல்லத்தில் (வள்ளக்குளம்) தாருல் பனாவைவிட்டும் தாருல் பக்காவை சேர்ந்தார்கள். 26—11—66 சனிக்கிழமை காலை 11 மணிக்கு நல்லடக்கம் செய்யப்பட்டது. எங்களின் தந்தை அவர்களின் பிரிவுக்கு நேரில் வருகை தந்தும், தந்தி தபால் மூலம் அனுதாபங்கள் தெரிவித்த உறவினர்கள், நண்பர்கள் யாவருக்கும் இதன் மூலம் நன்றியை தெரிவித்துக் கொள்கின்றோம்! மர்ஹூம் அவர்களின் ஆத்மா சாந்தி அடையவும், நல்லடியார்களின் கூட்டத்தில் சேரவும் எல்லாம்வல்ல இறைவனிடம் இறைஞ்சு வோமாக! ஆமீன்!!



பிறப்பு: 1896
இறப்பு: 1966

இப்படிக்கு,

ஏ. எம். ரஷீது என்ற
முஹம்மது அப்துல்லா, பினாங்கு.
ஏ. எம். முஹம்மது சதக்கு, பினாங்கு.
ஏ. எம். அப்துல் சலாம்,
(நேஷனல் ட்ரேடர்ஸ் அதிபர் காரைக்கால்.)
ஏ. எம். அஹ்மது இபுருஹீம்.

மு. முஹம்மது முஸ்தபா,
வள்ளக்குளம்.

கே: குர்ஆன் வசனங்களை தமிழ் அல்லது ஆங்கில எழுத்துக்களோடு சேர்த்து எழுதியிருந்தால் அக்காகிதங்களை கண்ட இடத்தில் போடலாமா?

ப: கூடாது! தமிழ் அல்லது ஆங்கில எழுத்துக்களோடு சேர்த்து எழுதுவதனுல் குர்ஆன் வசனங்களின் மதிப்பு குறைந்து விடுவதில்லையே!

செய்ஹுஸ், புருணைநகர்.

கே: காங்சிரஸ் ஆட்சியினுல் முஸ்லிம்களுக்கு விளைந்துள்ள தீங்குகள் யாவை?

ப: முரசு, நவம்பர் இதழில் வெளியாகியுள்ள காயிதெ மில்லத் அவர்களின் அறிக்கையைப் படித்துப் பாருங்கள். உங்கள் கேள்விக்கு அதிலே விடை காணலாம்.

ஹாரூன், சென்னை-14.

கே: திரு கிருஷ்ண மேனனுக்கு பம்பாய் 'டிக்கெட்' கிடைக்காமல் போனது எதைக் காட்டுகிறது?

ப: காங்கிரஸ்காரர்களுக்கு இந்திய ஒருமைப் பாட்டிலும், இந்தியாவில் எந்த ராஜ்யத்தைச் சேர்ந்தவராயினும் அவர் இந்தியரே என்னும் உண்மையிலும் நமபிக்கையில்லை என்பதைத்தான் காட்டுகிறது.

திரு காமராஜரின் செல்வாக்கு குறையத் தொடங்கி திரு. எஸ். கே. பாட்டிலின் கை ஓங்க ஆரம்பித்துள்ளதையே இது காட்டுகிறது என அரசியல் விமர்சகர்கள் கருதுகிருர்கள்.

எம். முகம்மது காசிம்
ராமநாதபுரம்.

கே: ஐ. நா. பந்தோபஸ்து சபைத் தேர்தலில் உலகப் பெரு நாடுகளில் ஒன்ருன நம் இந்தியாவுக்கு எதிராக மிகச்சிறிய தேசமான சிரியா போட்டியிட்டது தவறு தானே?

ப: உலக அரங்கில் தனது நாட்டிற்குப் பெருமை தேடித் தரத்தக்க பதவிகளுக்கு எந்த தேசமாக இருந்தாலும் போட்டியிடுவது தவருகாது. அப்படிப் பார்க்கப் போனுல் ஆப்கானிஸ்தானம் போன்ற மிகச் சிறியதொரு நாட்டின் பிரதிநிதி இன்றிருப்பதுபோல ஐ. நா. பொதுச் சபையின் தலைவராக வர முடியாது.

அத்தேர்தலில் இந்தியா தோற்கும்படி செய்ய வேண்டுமென்ற எண்ணத்துடன் பாக்கிஸ்தான் நடந்து கொண்ட முறைதான் மிகத் தவருனது.

எம். அப்துல் ஜப்பார்,
தஞ்சை.

கே: திருக் குர்ஆனின் தமிழ் மொழி பெயர்பபுகள பற்றிய கேள்விகளுக்கு பதிலளிக்கும் போது(நவம்பர் இதழில்) "முற்றுப் பெற்ற, விரிவுரையோடு கூடிய, தகுதிவாய்ந்த தமிழ் மொழிபெயர்பு எதுவும் வெளியாகவில்லை" என்று எழுதப் பட்டுள்ளது. அப்படியானுல்

அதுபோன்ற ஒன்று இருக்கவே செய்கிறது. ஆனால் அது இன்னும் முற்றுப்பெற வில்லை என்று தானே அர்த்தம்! தெளிவான விளக்கம் தேவை!

ப: ஜனாப் அல்ஹாஜ் பா. தா ஊத் ஷா சாஹிப் அவர்களின் குர்ஆன் மஜீத் தமிழ் விரிவுரை அப்படிப்பட்ட ஒன்று என்பதை தமிழ் கூறும் முஸ்லிம் உலகம் நன்கறியும். அதுவும் விரைவிலேயே முற்றுப் பெறப் போகிறது. என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவிக்கிறோம். அதன் சிறப்பியல்புகள் குறித்து இதற்கு முன்பும் எழுதியுள்ளோம். ஆராய்ச்சித் திறன் மிகுந்த அரியதொரு விளக்கவுரை அது என்பதில் ஐயமில்லை. அது போலவே, விளக்கவுரை சேராத தனி மொழிபெயர்புகளில் அல்லாமா ஆ. கா. அ. அப்துல் ஹமீது பாக்கவி அவர்களுடைய மொழி பெயர்ப்பும் மிகச் சிறந்ததாகும்.

குர்ஆனின் மொழி பெயர்ப்புகளும், விளக்க உரைகளும்

## நன்றி!

இரங்கூன் சோலிய முஸ்லிம் ஹைஸ்கூலில் அரபி ஆசிரியராகப் பணியாற்றிய, எங்கள் தந்தை ஹாஜி எஸ். பி. ஷெய்கு அப்துல் காதிர் சாஹிப் அவர்கள் 10—11—66ம் தேதி வியாழக்கிழமை இரங்கூனில் ஆகிரம் சேர்ந்தார்கள். இன்னாலில்லாஹி — எங்கள் தந்தையின் மரணத்திற்கு உள்நாடு, வெளிநாடுகளிலிருந்து தந்தி, தபால மூலம் அனுதாபம் தெரிவித்த உறவினர்கள், நண்பர்களுக்கும், மறுமையில் நற்பதவியளிக்கும்படி 'துஆ' செய்தும், எங்களுக்கு ஆறுதல் கூறிய உற்றார், உறவினர், நண்பர்களுக்கும் எங்கள் இதய பூர்வமான நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



இங்ஙனம்,

எஸ். அபுல் ஹைர் சாஹிப்

எஸ். பாத்திமாகனி பீ

எஸ். அஸ்மா ஜெய்லானி பீ

எஸ். ஏ. அமானுல்லாகான் (பேரன்)

கமுதி.

எவ்வளவு சிறந்தவையாக இருப்பினும் இதுதான் கடைசியானது, இதற்கு மேல் தேவையில்லை' என்று எதைக் குறித்தும் கூறிவிட முடியாது. மேலும் மேலும் எழுதப்பட்டுக் கொண்டு தானிருக்கும். அவ்வாறு எழுதப் படவும் வேண்டும்.

முழுக்க முழுக்க வரலாறும், புராணமுமான மஹா பாரதத்துக்கு, 40 ஆண்டுகளுக்கு முன் தொடங்கி 17 வால்யூம்களில் 18,000 பக்கங் கொண்ட விளக்க உரைகளோடு கூடிய பதிப்பு ஒன்று 22 லட்சம் ரூபாய் செலவில் வெளியிடப் பட்டு இப்போது தான் பூர்த்தியடைந்துள்ளது. திருக்குர்ஆன் போன்ற இறை மறைக்கு அதைவிட இன்னும் எவ்வளவு அதிகமான முயற்சி தேவை என்பதை இதிலிருந்து நாம் உணரக்கூடும்.

**எம். அமானுல்லா, திருச்சி-1.**

**கே: ஜமா அத்தெ இஸ்லாமியிலும் ஆர். எஸ். எஸ். ஸ்தாபனத்திலும் சர்க்கார் ஊழியர் உறுப்பினராக இருக்கக் கூடாதென அரசாங்கம் தடைவிதித்துள்ளதாமே, அது சரியா ?**

ப: இரண்டையும் ஒன்று போல சர்க்கார் கருதுவது தவறு. இந்தியக் கலாச்சாரம் வேறு, ஹிந்து கலாச்சாரம் வேறு என்றில்லை, எனவே ஒவ்வொரு இந்தியனும் ஹிந்து கலாச்சாரத்திற்கு ஒப்பவே வாழ வேண்டும் என்ற கொள்கையிலும் தீவிர நடவடிக்கைகளிலும் நம்பிக்கை கொண்டுள்ள ஸ்தாபனம் ஆர். எஸ். எஸ். தனக்கென ஒரு "தொண்டர்" படையையே அது நிறுவி வளர்த்து வருகிறது.

ஜமா அத்தெ இஸ்லாமி அமைதியான முறையில் சமூகப் பணிபுரியும் ஒரு மார்க்க கலாச்சார ஸ்தாபனம். இஸ்லாத்தில் மதம் வேறு, அரசியல் வேறு என்று இல்லாததால் அதனுடைய நடவடிக்கைகள் எல்லாத் துறைகளிலும் வியாபித்திருப்பதில் வியப்பில்லை. முஸ்லிம்கள் சொல்லிலும் செயலிலும் இஸ்லாமிய நெறிமுறைகளுக்கு இணங்க வாழவேண்டும் என்று அவர்கள் வற்புறுத்தி செயல் பட்டு வருகின்றனர். இஸ்லாமியக் கோட்பாடுகள் மனித இனம் முழுவதுக்குமே நன்மை பயக்கக் கூடியவையாகையால், அவர்களுடைய நடவடிக்கைகளால் அனைவருக்கும் நன்மை விளைகின்றனவே தவிர தீங்கு விளைந்ததாக யாரும் நிரூபித்ததில்லை.

தீவிரமான இந்து வகுப்புவாத ஸ்தாபனம் ஒன்றில் சர்க்கார் ஊழியர் சேரலாகாது என்று தடைவிதிக்கும் போது சர்க்கார் பட்சபாதமாக நடக்கிறுர்கள் என்று பெயர் ஏற்படும் என்ற பயத்தினுல் அதற்காக, வேண்டுமென்றே ஒரு முஸ்லிம் ஸ்தாபனத்தையும் தேர்ந்தெடுத்திருப்பதாகத் தோன்றுகிறது.

Edited & Published by N. B. Rameeza 18, Ramasamy St, Madras-1. Printed by V. Sambandan at Sengunthamithran Press. 33 Armenian St., Madras-1

ஈத் முபாரக்!

நகைகள் எப்பொழுதாவது சுமையாக இருப்பதுண்டா? (அதாவது, நல்ல பொருளில் அதிகம் என்று ஒன்றுண்டோ?)

—இந்தியப் பழமொழி.

**உத்தரவாதமுள்ள**
**பவுன்-வைர நகைகளுக்கு**
**மிகச் சிறந்த இடம்:**

# எல்.கே.எஸ்.

# ஜுவல்லர்ஸ்

**(எல். கே. செய்கு முஹம்மது பிரதர்ஸ்)**

**203, சைனு பஜார், சென்னை-1.**








یل. کے. یس. سلکس

(یل. کے. شیخ محمد برادرس)

۲۰۳، ین. یس. سی. بوس روڈ (چینا بازار) مدراس ۱